# HAIR LOSS & DANDRUFF IS YOUR PROBLEM ?

## Use ASWINI HOMEO HAIR OIL

- Stops falling of hair.
- ★ Removes Dandruff.
- Provides Cooling effect.
- Relieves Head-ache.
- Helps rich growth.
- Prevents premature greying.



IMPROVED

### User's Opinion

Hair loss .... was a severe problem I had been suffering from .. However, after careful enquiry and much thinking I started using **Aswini Homeo Hair Oil.** Today ... not only has my hair stopped falling, but also glows with good health - Grows thick long and lustrous. The use of this unique hair oil has also completely cured my head-ache.

For the twin benefits of total relief from Hair-loss and Headaches, I wish to express my grateful thanks to the company that manufactures **Aswini Homeo Hair Oil.**

**Sirangi Lakshmi Prasuna**
Village Ghanapuram, Mulugu Taluk, Warangal, Dist.




**PURE COCONUT OIL + HOMEO MEDICINES = ASWINI HOMEO HAIR OIL**

Anju Ads




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

## தரமான கல்வி தேவை

பள்ளிகளும் கல்லூரிகளும் இப்போது திறந்து விட்டன. இவற்றில் சேர மாணவர்கள் துடிக்கிறார்கள். ஆனால் இந்த கல்வி நிறுவனங்களில் எல்லா வசதிகளும் செய்து கொடுக்கப்படுகின்றனவா? பல பள்ளிகளில் கரும்பலகைகளே இல்லை. நூல் நிலையங்களோ, ஆராய்ச்சிக் கூடங்களோ இருப்பதில்லை.

இத்தகைய நிறுவனங்கள் கல்வியை வியாபாரப் பொருளாக்கிப் பணம் சம்பாதிப்பதையே தம் நோக்கமாகக் கொண்டுள்ளன. வசதிகள் குறைவாக உள்ள இந் நிறுவனங்களில் அளிக்கப்படும் கல்வியின் தரமோ மிகவும் தாழ்ந்துள்ளது. இந்நிறுவனங்களில் படித்து வெளிவரும் மாணவர்கள் எப்படி பொறியியல், இரசாயன, மருத்துவத் துறைகளில் பட்டம் பெற்று முன்னுக்கு வர முடியும்?

எனவே கல்வியின் தரத்தை உயர்த்த கல்வி அளிக்கும் நிறுவனங்களும் எல்லா வசதிகளையும் கொண்டிருக்கின்றனவா எனக் கண்காணித்து ஆவன செய்ய வேண்டும்.





மதிமுகம்: 99 ஜூலை 1996 புன்னகை: 1

தனிப்பிரதி: ரூ.6.00 வருட சந்தா: ரூ.72.00



# JUST RELEASED

The first set of **Chandamama Books,** splendid in their content, illustrations, and production, is now ready.




Rs. 30/-




Rs. 40/-




Rs. 30/-




Rs. 30/-




Rs. 25/-




Rs. 30/-

Discount for members of
**Chandamama Young Scholars Club.**



For details, write to :

**CHANDAMAMA BOOKS**
Chandamama Bldgs.
Vadapalani, Madras - 600 026.

செய்திகளும் தகவல்களும்:

# ஸ்பெயினில் மாறுதல்

ஸ்பெயின் மக்கள் ஆட்சியில் மாற்றம் விரும்பினார்கள். 1882லிருந்து ஆட்சியிலிருந்த சோஸலிஸ்ட் கட்சியை அகற்றினார்கள். மார்ச் 3ல் ஸ்பெயினின் நாடாளுமன்றக் கீழ் சபைக்குத் தேர்தல் நடந்தது. 350 இடங்களைக் கொண்ட அந்த அவையில் பிலிப் கொன்சாலெஜ் தலைமையிலான சோஸலிஸ்ட் கட்சிக்கு 141 இடங்களே கிடைத்தன. கஜாஸ் மேரியா அஜ்னார் தலைமையிலுள்ள பாபுலர் கட்சிக்கு 156 இடங்கள் கிடைத்தன. ஆட்சியைக் கைப்பற்ற அக்கட்சிக்கு மேலும் 20 இடங்கள் தேவை. 16 இடங்களைக் கைப்பற்றிய காடலாஸ் தேசியக் கட்சியும் 5 இடங்களை வென்ற பாஸ்கி தேசியவாதிகளும் பாபுலர் கட்சிக்கு ஆதரவு அளித்தன. அதனால் அக் கட்சி ஆட்சிக்கு வர முடிந்தது.

சோஸலிஸ்ட் கட்சி மீது மக்கள் வெறுப்படைய பல காரணங்கள் உள்ளன. அவற்றில் லஞ்ச ஊழல் முக்கியமானது. உள்துறை அமைச்சரின் உதவியுடன் சிலர் எதிர்கட்சியான பாஸ்கி தேசியவாதிகளின் தொண்டர்களில் சிலரைக் கொன்றுவிட்டார்கள். அதனால் அந்த அமைச்சர் பதவி நீக்கம் செய்யப்பட்டார். அதனால் காடலாஸ் தேசியக் கட்சி ஆளும் கட்சிக்குத் தான் அளித்து வந்த ஆதரவை விலக்கிக் கொண்டது. தேர்தலை உடனே நடத்த வேண்டும் என்றும் அது வற்புறுத்தியது. நாட்டின் பொருளாதார நிலை திருப்திகரமாக இருந்தும் இளைஞரிடையே வேலையின்மைப் பிரச்னை தலை தூக்கியது. இக்காரணங்களால் மக்களுக்கு ஆளும் கட்சி மீது வெறுப்பு ஏற்பட்டது.

இரண்டாவது உலகப் போரின் போது (1939–45) ஸ்பெயினின் அதிபராக ஜெனரல் பிராங்கோ இருந்தார். அப்போது ஸ்பெயின் மன்னர் நாட்டை விட்டு ஓடி விட்டார். அவர் இறந்த பின் ஸ்பெயின் முடியாட்சியின் கீழ் வர வேண்டுமென அவர் விரும்பினார். ஆனால் அந்த விருப்பம் ஜெனரல் பிராங்கோ 1975ல் இறந்த பிறகுதான் நிறைவேறியது.

1978ல் ஸ்பெயின் புதிய அரசியல் அமைப்பை வகுத்துக் கொண்டது. ஜனநாயகக் கட்சி சார்பில் அடால்போ ஸ்க்வாரெஜ் பிரதம மந்திரியானார். 1982ல் நடந்த தேர்தலில் கொன்சாலெஜ் தலைமையில் சோஸலிஸ்ட் தொழிலாளர் கட்சி மாபெரும் வெற்றி பெற்று ஆட்சியில் அமர்ந்தது. ஆனால் அதற்குப் பின் நடந்த இரு தேர்தல்களில் அதற்குக் கிடைத்து வந்த ஆதரவு சரியலாயிற்று. நான்காவது முறையாகக் கூடத் தாமே பிரதம மந்திரி ஆகி விடலாமென கொன்சாலெஜ் எண்ணினார். ஆனால் மக்கள் தீர்ப்பு வேறு விதமாக ஆயிற்று.

இதுபற்றி அக்கட்சியின் துணைத் தலைவர் விமரிசித்தபோது ''இதுபோன்ற தோல்வியை எதிர்பார்க்கவில்லை'' என்றார்.





# தருமனின் தலைக்கனம்

தருமனுக்கு தான் என்ற கர்வம் உண்டு என யாவரும் கூறினர். ஆனால் மக்களிடம் கர்வத்தோடு பேசும் அவன் தன் உயர் அதிகாரிகளிடம் குழைந்து பேசிப் பணிவுடன் நடந்து கொண்டதால் விரைவில் முன்னுக்கு வந்து விட்டான். ஆனால் அந்நாட்டு மன்னனுக்கு ஏதோ ஒரு காரணத்தால் கோபம் ஏற்பட்டது. அவனை வேலையிலிருந்து நீக்க உத்தரவிட்டான்.

தருமன் கலங்கிப் போய் சுகீர்த்தி என்ற அமைச்சரிடம் போய் தன் உத்தியோகம் போகாமல் செய்யும்படிக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். அவரும் ''நீ யாரிடமோ துடுக்காகப் பேசி இருக்க வேண்டும். அதனால் கோபம் கொண்டு அவர் அரசரிடம் போய் உன்னைப் பற்றி புகார் செய்திருக்கிறார் போலிருக்கிறது. நன்றாக யோசித்துப் பார். யாரிடம் என்ன கூறினாய்?'' என்றார்.

தருமனும் ''நான் எந்த அதிகாரியிடமும் மரியாதைக் குறைவாகப் பேசவில்லையே.. நகர வியாபாரிகளில் ஒரு சிலரை சட்டத்தை மீறி நடந்தார்கள் என்பதற்காக இரண்டு நாட்களுக்கு முன் அவர்களை மிரட்டினேன். ஒருவேளை அவர்கள் ஏதாவது புகார் செய்திருக்கலாம்'' என்று கூறினான்.

சுகீர்த்தியும் ''இப்போது நீ என்னோடு வா. அரசரைக்கண்டு நீ எக்காரணத்தால் வேலையிலிருந்து நீக்கப்பட்டாய் என்பதை அவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு பிறகு ஆக வேண்டியதைச் செய்யலாம்'' என்றார்.

சுகீர்த்தியும் தருமனை அழைத்துக் கொண்டு அரசனிடம் போனார். அவர் அரசனிடம் ''அரசே! இந்த தருமன் மிகவும் நல்லவன், அறிவாளி, திறமை மிக்கவன் ஏதோ ஒரு சிறிய தப்பு செய்து விட்டான் போலிருக்கிறது. அதனால் நீங்கள் கோபம் கொண்டு இவனை வேலையிலிருந்தே நீக்கி விட்டீர்கள். அந்த உத்தரவை ரத்து

—சிவனார் செல்வன்

செய்து இவனுக்கு மறுபடியும் வேலை கொடுங்கள்'' என்று சிபாரிசு செய்தார்.

மன்னனும் சற்று யோசித்து ''சரி. இவனைப் பற்றிப் பலர் புகார் செய்திருக்கிறார்கள். இவன் அதிகார மமதையில் யாரையும் மதிப்பதில்லையாம். அநாவசியமாகப் பலரைத் துன்புறுத்தி இருக்கிறான். இதற்கான சாட்சியங்களோடு நேற்று இவ்வூர் பிரபல வியாபாரி ஒருவர் என்னைக் கண்டு புகார் கூறினார். அதனால் இவன் செய்த தவறுக்காக ஏதாவது தண்டனை கொடுத்தே ஆக வேண்டும். அதனால் இவனுக்குத் தலைநகரில் வேலை கொடுக்காமல் தொலை தூரத்திலுள்ள சிங்கபுரத்தின் கிராம அதிகாரியாக நியமிக்கிறேன்'' என்று கூறினான்.

தருமனும் அரசனின் கட்டளைப் படி சிங்கபுரத்திற்குப் போய் கிராம அதிகாரியாகப் பதவி ஏற்றான். அது வரை அவன் வகித்த பதவிக்கும் தற்போது அவன் வகிக்கும் பதவிக்கும் நிறைய வித்தியாசம் இருந்தது. முந்தைய நிலையில் எந்த உயர் அதிகாரி வந்தாலும் அவருக்குக் கும்பிடு போட்டு அவர் தயவிற்காகக் காத்து நிற்க வேண்டி இருந்தது. இப்போதைய வேலையிலோ அப்படி இருக்க வேண்டியதில்லை. அவன் முன் பலர் நின்று அவன் உத்தரவிற்காகக் காத்து நின்றார்கள்!

அந்த கிராமத்தில் அவனுக்கு யோசனை சொல்ல கலாதரன் என்பவன் கிடைத்தான். அவன் புத்திசாலி நேர்மையானவன். விருப்பு வெறுப்பு இல்லாமல் எதற்கும் நல்ல முடிவைக் கூறுபவன். பிறர் விஷயத்தில் அநாவ



சியமாகத் தலையிடாமலும் தன்னலமற்றும் இருப்பவன். அவனது யோசனைகளால் கொஞ்ச நாட்களிலேயே தருமனுக்கு நல்ல பெயர் கிடைத்துவிட்டது.

தருமனும் அவ்வப்போது ஊர்ப் பிரமுகர்களைக் கூட்டி தன் நிர்வாகம் பற்றி அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்று அறிந்து வந்தான். அவர்களும் ''உங்களுக்குக் கலாதரனின் யோசனைகள் கிடைப்பதால் இங்கு எந்தத் தவறும் நடக்கவே முடியாது. எல்லாம் ஒழுங்காகவே நடக்கும்'' என்றார்கள்.

இதைக் கேட்டு தருமனின் மனம் வாட்டமுற்றது. ஏனெனில் அவன் எல்லாம் ஒழுங்காக நடந்து வருவது தன் திறமையால்தான் என்று எண்ணி கர்வப்பட்டுக் கொண்டிருந்தான். ஆனால் ஊர்ப் பிரமுகர்களெல்லாம் ஒரே விதமாகக் கலாதரனின்



யோசனைகளால்தான் எதுவும் நல்ல விதமாக நடக்கிறது என்று கூறி விடவே அது தனக்கு பெருத்த அவமானம் என்று நினைத்தான். அதனால் அவன் கலாதரனை அழைத்து ''இந்த கிராம நிர்வாகம் நன்கு நடைபெறுவது என் திறமையாலா அல்லது உன் யோசனைகளாலா?'' என்று கேட்டான். கலாதரனும் சிரித்தவாறே ''இதற்கு முன் இருந்த கிர்ாம அதிகாரிக்கும் நான்தான் யோசனை கூறி வந்தேன். நான் யோசனை கூறினாலும் அது நல்லதா அல்லது கெட்டதா என்று பார்த்து ஏற்பதோ அல்லது நிராகரிப்பதோ கிராம அதிகாரியினுடைய வேலை. அதனால் நிர்வாகம் நன்கு நடைபெறக் காரணம் உங்கள் திறமையேதான். என் யோசனைகள் அல்ல'' என்றான்.

இந்த பதில் தருமனுக்குத் திருப்தியை அளிக்கவில்லை. கிராம அதிகாரி ஒருவரது யோசனைகளைக் கேட்ட பின்தான் முடிவு எடுக்க வேண்டும் என்பதுதான் கலாதரனின் எண்ணமா? அப்படியானால் ஒருவரது யோசனைகளைக் கேட்டால் மட்டும் போதாது. வேறொருவரிடமும் யோசனை கேட்க வேண்டும்.

தருமன் ஊரில் விசாரித்ததில் கலாதரனைச் சற்றும் பிடிக்காதவன் கங்காதரன் என்பது தெரிந்தது. அவன் கங்காதரனிடமும் இனி யோசனை கேட்கப் போவதாகக் கலாதரனிடம் கூறினான். கலாதரனும் ''தாங்கள் யாரிடம் யோசனை கேட்டாலும் அது நல்லதா எனப் பரிசீலிப்பது நீங்கள்தானே அதனால் உங்களிடம் யார் வேண்டுமானாலும் தம் யோசனைகளைத் தெரிவிக்கலாமே'' என்றான். அது முதல் தருமன் கங்காதரனிடமே யோசனை கேட்கலானான்.

கங்காதரனும் அறிவாளியே. ஆனால் தான் என்ற அகம்பாவம் கொண்டவன். கிராம அதிகாரிக்கு யோசனை சொல்பவன் என்று தனக்குப் பெயர் வந்து விட்டால் தன் அந்தஸ்து உயர்ந்து விடுமென கங்காதரன் நினைத்தான். அதனால் கிராம அதிகாரியின் அலுவலகத்தில் தனக்கு ஒரு தனி அறை இருந்தால் நல்லது என நினைத்து அவன் அது பற்றி தருமனிடம் கூறினான்.

தருமனும் ''உனக்கு மட்டும் ஒரு தனி அறை கொடுத்தால் நன்றாக இராது. கலாதரனுக்கும் ஒரு தனி அறை கொடுக்கிறேன். ஆனால் அவனிடம் எந்த யோசனையையும் நான் கேட்கப் போவதில்லை'' என்றான். அது கேட்டு கங்காதரன் ''நீங்கள்

தாம் அவனிடம் யோசனை கேட்கப் போவதில்லையே. அப்படியானால் அவனுக்குத் தனி அறை எதற்கு?'' என்று கேட்டுத் தன் பொறாமையை வெளிப்படுத்தினான்.

தருமனும் ''அவனுக்கு ஊரில் நல்ல பெயர் இருக்கிறது. திடீரென நான் அவனைப் புறக்கணிப்பதாக மற்றவர்கள் எண்ணி விடக் கூடாது. உங்கள் இருவரையும் நான் சமமாக பாவிப்பதாக எல்லோரும் அறியும் படி நடந்து கொள்ள வேண்டும். ஆனால் நான் மட்டும் அவனிடம் யோசனைகேட்கமாட்டேன். ஏனென்றால் ஊரில் பலரும் நான் என்னவோ அவனது யோசனைகளைக் கேட்டு அவற்றின்படி நடப்பதால்தான் கிராம நிர்வாகம் நன்றாக நடப்பதாக நினைக்கிறார்கள். கலாதரனும் அப்படித்தான் நினைக்கிறான். அது உண்மை இல்லை என்று செய்து காட்ட வேண்டும்'' என்றான். கிராம அதிகாரியின் அலுவலகத்தில் கங்காதரனுக்கும் கலாதரனுக்கும் தனித்தனி அறைகள் ஒதுக்கப்பட்டாலும் கலாதரன் அங்கு போய் உட்காரவில்லை.

கங்காதரன் தினமும் தனக்கு ஒதுக்கப்பட்ட அறையில் உட்காரலானான். தருமனிடம் ''நீங்கள் கிராம அதிகாரி. அதாவது இங்கு நீங்கள்தான் ராஜா. அதனால் எல்லோரையும் சட்டெனப் பார்க்கக் கூடாது அவர்கள் கை கூப்பி வணங்கினால் தலையை லேசாக ஆட்டி ஒரு புன்னகை புரிய வேண்டும். எப்போதும் கடுகடுப்பாக இருப்பது போல முகத்தை வைத்துக் கொள்ள வேண்டும் அதட்டல், மிரட்டல், உருட்டல் என்று உங்கள்



பேச்சில் இருக்க வேண்டும்'' என்று கூறலானான்.

ஏற்கனவே கர்வம் கொண்டுள்ள தருமனுக்கு கங்காதரனின் இந்த யோசனைகள் மிகவும் பிடித்துப் போயின. அதனால் அவன் தன் போக்கை மாற்றிக் கொண்டான். அதனால் அவனிடம் முன்பு தாராளமாக பேசிப் பழகியவர்கள் அவன் அரசாங்க அதிகாரியாயிற்றே என்று பயப்படலானார்கள். ஆனால் கலாதரன் மட்டும் எல்லோரையும் போல நடக்கவில்லை. பிறர் வணக்கம் செலுத்தினால் தருமன் பதிலுக்கு வணக்கம் செலுத்தாமலிருப்பதைக் கண்ட கலாதரன் அவனைக் கண்ட போது வணக்கம் செலுத்தாமலே இருக்கலானான். அவனாகப் போய் தருமனுக்கு யோசனை கூறுவதையும் விட்டு விட்டான்.

ஒருநாள் தருமன் காரணமில்லா



மல் கலாதரனிடம் எரிந்து விழவே அவனும் ''நான் என்ன தவறு செய்தேன் என்று கூறினால் விளக்கம் தருகிறேன். இப்படி அநாவசியமாகத் தொந்தரவு கொடுத்தால் நான் அரசரிடம் உன்னைப் பற்றிப் புகார் செய்வேன்'' என்றான். அது கேட்டு தருமன் பயந்தாலும் கலாதரன் மிரட்டுகிறான் என எண்ணி ''என்னவென்று புகார் செய்யப் போகிறாய்?'' என்று கேட்டான்.

கலாதரனும் அவன் மீது வரிசையாகக் குற்றச்சாட்டுகளை அடுக்கவே, தருமனும் ''போதும் போதும் இனி மேல் நீ என்னுடன் பேச வேண்டாம். போய்விடு'' என்றான். கலாதரனும் ''போகாமல் இங்கேயே இருக்கவா போகிறேன்? நீ கேட்டதால் என் புகார்கள் என்ன என்று கூறினேன். நீயே விரும்பாததால் நானும் உன்னோடு பேச மாட்டேன்'' என்று கூறி விட்டுப் போய் விட்டான்.

அது முதல் கலாதரன் தருமனிடம் பேசவில்லை. இதனால் தருமனுக்கு அவன் மேல் கோபம் ஏற்பட்டது. ஆனால் என்ன செய்வதெனத் தெரியாமல் கங்காதரனிடம் யோசனை கேட்டான். அவனும் ''கிராமப் பழங் கணக்கில் சந்தேகம் இருப்பதாகக் கூறி அவனிடம் விளக்கம் கேளுங்கள் அப்போது அவன் பேசித்தானே ஆக வேண்டும்'' என்று யோசனை கூறினான். ''அவன் முதலில் பேசாவிட்டால் நானல்லவா பேச வேண்டும்?'' என தருமன் கூறவே கங்காதரனும் ''நீங்கள் தலையாரியை அனுப்புங்கள் தன்னால் வந்து விடுவான்'' என்றான்.

தலையாரி கலாதரனிடம் போய் விஷயத்தைக் கூறவே கலாதரனும் ''கணக்கில் என்ன சந்தேகம் என்று சொல்லட்டும் அதை வந்து என்னிடம் சொல்'' என்று அவனைத் திருப்பி அனுப்பிவிட்டான். தலையாரி கூறியதைக் கேட்ட தருமன் ''இந்தக் கலாதரனுக்கு எவ்வளவு கர்வம் பார்'' என்று கங்காதரனிடம் கூறினான். அவனும் ''இனி நீங்கள் எல்லா விதத்திலும் தொந்தரவு கொடுங்கள். அவனது வீட்டு வரி, நிலவரியை உயர்த்துங்கள். அவனது வயல்களுக்குத் தண்ணீர் பாயாமல் தடுத்து விடுங்கள். அவனது விளைச்சலுக்கு நல்ல விலை கிடைக்காதபடி செய்யுங்கள்'' என்றான்.

கங்காதரனின் யோசனைப்படியே தருமனும் செய்தான். கலாதரன் அவற்றையெல்லாம் சகித்து கொண்டான். சில நாட்களுக்குப் பின் கலா

தரன் தன் மகளின் திருமணத்தை நடத்தினான். அதற்கு ஊரிலுள்ள எல்லோரையும் அழைத்தான். ஆனால் தருமனை மட்டும் அழைக்கவில்லை. இதனால் ஆத்திரம் கொண்டு கலாதரன் மீது எதாவது பொய் வழக்கு போட்டு அவனைச் சிறையில் தள்ள தருமன் எண்ணினான்.

இது கலாதரனுக்குத் தெரியவந்தது. அவனது நெருங்கிய உறவினர் தாம் அமைச்சர் சுகீர்த்தி. கலாதரன் தலை நகருக்குப் போய் அவரிடம் தருமனின் அநியாயச் செயல்களைப் பற்றிக் கூறினான். அவரும் ''ஓ! என்னிடம் கெஞ்சிக் கூத்தாடிய தருமனா இப்படி ஆட்டம் போடுகிறான்? இங்கே என்னிடம் தன் வேலை நிலைக்க வைக்க வேண்டும் என்று எப்படிக் கண்ணீர் விட்டு கதறினான். நான் அவன்மீது இரக்கம் கொண்டு மன்னரிடம் அழைத்துப் போய் அவனது வேலை போகாமல் செய்து உன் ஊருக்கு கிராம அதிகாரியாக அனுப்பச் செய்தேன். அவனா இப்படித் துள்ளுகிறான்? அவனை உடனேயே வேலையிலிருந்து நீக்க உத்திரவு பிறக்க வைக்கிறேன்'' என்றார்.

கலாதரனும் ''இதனால் பிரச்னை தீர்ந்துவிடாது. பதவியிலுள்ளவர்கள் இப்படி வெறியாட்டம் ஆடுவதைத் தடுக்க வழி காண வேண்டும்'' என்றான். சுகீர்த்தியும் ''இப்போது மன்னர் உடல் நலம் குன்றி இருப்பதால் அவரது மகனே ஆட்சியை கவனித்து வருகிறான். அவன் நல்லவன். அவனிடம் உன் பிரச்னையைக் கூறினால் நல்லவழி பிறக்கும்'' என்றார்.

சுகீர்த்தி கலாதரனை அழைத்து



கொண்டு இளவரசனிடம் சென்றார் இளவரசனும் ''ஓகோ! இம்மாதிரி மற்ற கிராம அதிகாரிகளும் நடக்கக் கூடாது. அவர்களுக்கு எச்சரிக்கை செய்வது போல ஒரு நடவடிக்கை எடுக்கிறேன். நாலைந்து நாட்களில் நானே சிம்மபுரத்திற்கு வருகிறேன். அங்குள்ளவர்களைக் கூட்டிப் பேசி தருமனுக்குப் புத்தி புகட்டுகிறேன்'' என்றான்.

இளவரசன் தான் கூறியபடியே சுகீர்த்தியுடனும் கலாதரனுடனும் சிம்மபுரத்திற்குச் சென்றான். அவர்களைக் கண்ட தருமன் பயந்து நடு நடுங்கினான். ஆனாலும் தைரியத்தை இழக்காமல் அவன் இளவரசனிடம் பேசி அவன் ஊர்க் கூட்டத்தில் எதற்கோ மன்னிப்பு கேட்கப் போவதாகத் தெரிந்து கொண்டான். கூட்டம் விரைவில் கூட்டப்பட்டது. கலாதரன் முதலில் எழுந்து ''இளவரசர்

எதற்கோ உங்களிடம் மன்னிப்புக் கோரப் போகிறார். ஆட்சியில் ஏதோ தவறு நடந்திருக்கிறதாம்'' என்று கூறினான்.

இளவரசனும் ''இந்த ஊரில் நல்ல நிர்வாகம் இருக்க வேண்டும் என்பதற்காக என் தந்தை ஒரு அதிகாரியைத் தேர்ந்து எடுத்து அனுப்பினார். ஆனால் அந்த அதிகாரி தானே ராஜா என எண்ணி கர்வப்பட்டுக் கொண்டு தலைகால் புரியாமல் கொட்டம் அடிக்கிறான். என் தந்தை இப்படிப்பட்ட மண்டைக்கர்வம் கொண்ட ஒருவனை இவ்வூரின் அதிகாரியாக நியமித்ததற்காக நான் உங்களிடம் மன்னிப்புக் கோருகிறேன். மண்டைக் கர்வத்தால் மதி இழந்து மனம் போனபடி நடக்கும் இந்த தருமன் தான் இவ்வாறு செய்து கொண்டிருக்கிறான் என்பதற்கு இப்போது விளக்கம் கூறி தான் செய்த தவறுகளை ஒப்புக் கொண்டு பகிரங்கமாக மன்னிப்பு கேட்க வேண்டும். குறிப்பாக இந்தக் கலாதரனுக்கு அநாவசியத் தொந்தரவுகள் கொடுத்தற்கும், பொய் வழக்குப் போட முயல்வதற்கும் மன்னிப்புக் கோர வேண்டும். இதைச் செய்யாவிட்டால் அடுத்த நடவடிக்கை என்ன என்பதைச் சற்று நேரத்தில் அறிவிப்பேன்'' என்றான்.

தருமன் வெலவெலத்துப் போனான். அவன் கங்காதரனைப் பார்த்தான். கங்காதரனோ முகத்தைத் திருப்பிக் கொண்டு அவனைப் பார்க்கவே இல்லை. அதனால் தருமன் முதலில் கலாதரனிடம் தன்னை மன்னித்து விடும்படி வேண்டினான். ஊர் மக்களிடம்தான் மதிகெட்டுப் போய் கங்காதரனின் யோசனைகளைக் கேட்டுப் பண்பில்லாமல் கொடூரமாக நடந்து கொண்டதற்காகத் தன்னை மன்னிக்கும்படிக் கெஞ்சினான்.

அப்போது ''நீ செய்த தவறுகளை உணர்ந்து மன்னிப்புக் கேட்டாய், இது போதும்'' என்றான். சுகீர்த்தியும் ''இனிமேல் கர்வமும் தான் என்ற அகம்பாவமும் கொள்ளாமல் நீ வேலை பார்ப்பதானால்தான் உனக்கு இந்த வேலை நீடிக்கும்'' என்றார்.

தருமனும் அவமானத்தாலும் வெட்கத்தாலும் தலைகுனிந்து நின்றான். அதற்குப்பின் அவனது மண்டைக் கர்வம் மறைந்து போயிற்று.






# 12

(ரூபதரன் பல கஷ்டங்களை அனுபவித்துப் பலநாடுகளில் திரிந்த பின் முடிவில் தன் நாட்டை அடைந்தான். அப்போது அவன் மகன் தீரமதி தன் தந்தையைப் பற்றித் தகவல் அறிய வெளி நாடுகளுக்குக் கப்பலில் கிளம்பினான். ரூபதரனின் மனைவியை மணக்க பல அரசகுமாரர்கள் தன் மாளிகையில் வந்து தங்கி செய்யும் அட்டகாசங்களை அவனால் சகிக்கவும் முடியவில்லை. இதற்காக அவன் ஒரு கூட்டம் கூட்டித் தன் தந்தையைப் பற்றித் தெரிந்து வருவதாக அறிவித்து விட்டே கிளம்பினான். அதன் பிறகு-)

கப்பல் பைலாஸ்தீவை அடைந்தது. அப்போது சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தான். கடற்கரையில் மக்கள் வருணதேவனைப் பூசித்து பலிகளைக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். ஆடுகள் மந்தை மந்தையாக நின்று கொண்டிருந்தன. பலிகொடுத்த மிருகங்களைப் பக்குவப்படுத்தி வினியோகிக்கப் பெரிய பெரிய கோட்டை அடுப்புகளில் பாத்திரங்கள் வைக்கப் பட்டிருந்தன.

தீரமதி தன் கப்பலை நங்கூரம் பாய்ச்சி நிறுத்தினான். அவன் தன்னோடு வந்த சகசனுடன் கரையில் இறங்கி நடந்து செல்லலானான். அவர்கள் இருவரும் அங்கிருந்தவர்களை எல்லாம் பார்த்தவாறே சென்று கொண்டிருந்தனர்.

அப்போது தீரமதி "நாம் பைலாஸ் தீவை அடைந்து விட்டோம். இப்போது நாம் ட்ராய் போரில் கலந்து கொண்ட இத்தீவின் மன்னர் நவத்யோதனரைக் காணப் போகிறோம். நானோ வயதில் மிகச் சிறியவன்.

அவரிடம் என்ன கேட்பது, எப்படிப் பேசுவது என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

''நாம் இப்போது நவத்யோ தனனைச் சந்திக்கச் சென்று கொண்டிருக்கிறோம். நீ அவனிடம் எதற்காக வந்தாய் என்பதைச் சற்றும் தயங்காமல் சொல். உன் தகப்பனாரைப் பற்றிய முழு விவரத்தையும் கேட்டுத் தெரிந்து கொள். அவர் உயிருடன் இருக்கிறார் என்று கூறினால் எங்கே இருக்கிறார் என்று கேள். இறந்து விட்டார் என்று தெரிவித்தால் எப்போது எங்கு இறந்தார் என்று கேள். இந்த விவரங்களை நவத்யோதனன் எவ்வாறு தெரிந்து கொண்டான் என்றும் கேள். அவர் நீ கேட்கும் கேள்விகளுக்கு எல்லாம் எதையும் மறைக்காமல் பதில்கூறிவிடுவார்'' என்று சகசன் தீரமதியிடம் கூறினான்.

தீரமதியும் ''நான் இளைஞன் அனுபவம் இல்லாதவன். முறையாகப் பேசத் தெரியாதவன். அவரோ என்னை விட வயதில் பெரியவர். அனுபவத்தில் முதிர்ந்தவர். போர்க் களத்தில் பல வீரர்களோடு சேர்ந்து போரிட்டிருக்கிறார். அவ்வீரர்களில் என் தந்தையைப் பற்றிய நினைவு அவருக்கு இருக்கிறதோ என்னவோ? நான் அறிய விரும்பும் தகவல்கள் கிடைக்காமல் போய் விடுமோ? இது தான் எனக்கு பயமாக இருக்கிறது'' என்றான். சகசன் அவனுக்கு தைரிய மூட்டி நவத்யோதனனும் அவனது ஆட்களும் இருந்த கூடாரத்திற்கு அழைத்துச் சென்றான். யாரோ புதியவர்கள் வருவது கண்டு நவத்யோதனின் மைந்தர்கள் எழுந்து போய் அவர்களை வரவேற்றார்கள். அவர்கள் அமர்வதற்கு தோல் விரிப்புகளை விரித்தார்கள். அவர்களுக்குப் பழங்களையும் திராட்சை ரசத்தையும் கொடுத்தார்கள்.

அவர்கள் அவற்றை உண்டு பானம்



பருகிய பின் நவத்யோதனன் அவர்களிடம் ''சரி, நீங்கள் யார்? எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள்? இங்கு எதாவது வேலையாக வந்திருக்கிறீர்களா?'' என்று பரிவுடன் கேட்டான்.

தீரமதியும் துணிவு கொண்டு ''அரசே! நாங்கள் இதாகாவைச் சேர்ந்தவர்கள். ட்ராய்ப் போரில் என் தந்தை ரூபதரன் தங்களோடு சேர்ந்து போர் புரிந்தவர். அவரைப் பற்றித் தகவல் அறிந்து கொள்ளவே தங்களை நாடி வந்திருக்கிறேன். ட்ராய்ப் போருக்குப் போய் விட்டு வந்த எல்லோர் பற்றிய தகவல்கள் தெரிந்தன. ஆனால் என் தகப்பனாரைப் பற்றி எதுவும் தெரியவில்லை. அவரைப் பற்றித் தங்களுக்குத் தெரிந்திருந்தால் தயவு செய்து கூறுங்கள். நீங்களும் அவரோடு சேர்ந்து போர் களத்தில் செயல்பட்டவர். எனவே என் தந்தையைப் பற்றித் தங்களுக்குத் தெரிந்திருக்கும்'' என்றான்.

நவத்யோதனன் அவன் கூறியதைக் கேட்டு சற்று நேரம் மௌனமாக இருந்தான். அப்போது சகசனும் ''நாங்கள் தொலை தூரத்திலிருந்து சிரமப்பட்டு வந்திருக்கிறோம். தாங்கள் ட்ராய்ப் போரில் கலந்து கொண்டு விட்டுத் திரும்பி வந்திருப்பதால் தங்களிடம் விவரங்களைக் கேட்டறிய வந்திருக்கிறோம்'' என்றான்.

அதைக் கேட்ட நவத்யோதனனும் ''அப்பனே! நீ எனக்கு இப்போது கடந்த கால நிகழ்ச்சிகளை என் நினைவிற்குக் கொண்டு வந்து விட்டாய். வஜ்ஜிரகாயனின் தலைமையில் நாங்கள் எல்லோரும் கடல் கடந்து போய் ட்ராய் நகரை முற்றுகை இட்டோம். ஒன்பது ஆண்டுகள் கடும்போர் நிகழ்ந்தது. எங்களில் பல வீரர்கள் இறந்தார்கள். ஒன்பது ஆண்டுகள் பல கஷ்டங்களை அனுபவித்து முடிவில் வெற்றியைக் கண்டோம். அப்போரில் உன் தந்தையைப் போலப் போரிட்டவர்



TA F-3



என்று வேறு யாரையும் சொல்ல முடியாது. உன் தந்தைக்கும் எனக்கும் ஒரு நாள் கூடக் கருத்து வேற்றுமை ஏற்பட்டது என்று கிடையாது. எங்கள் இருவரது எண்ணங்களும் ஒன்றாகவே இருந்தன. ஆனால் ட்ராயை விட்டுக் கிளம்பிய போது எங்களிடையே பிளவு தோன்றியது. முடிவில் ராஜராஜனும் பிரதாபனும் கூட அபிப்பிராய பேதம் கொண்டு விட்டனர். இதனால் நாங்கள் இருபிரிவுகளாகப் பிரிந்தோம். ஒரு கட்சியினர் பிரதாபனின் தலைமையில் கப்பலில் ஏறிக் கிளம்பி விட்டார்கள். அப்பிரிவில் நானும் சேர்ந்தேன். மற்ற கட்சியினர் ராஜராஜனுடன் தேவதைகளை வழிபட அங்கேயே இருந்து விட்டனர். நாங்கள் கடலில் கொஞ்ச தூரம் போனதுமே உன் தந்தை ட்ராய் நகருக்குத் திரும்பிப் போய் விடவேண்டும் என்று கூறினார். அவருடன் சிலர் சேர்ந்து சென்றும் விட்டார்கள். நானும் தேவமயனும் மற்றும் சிலரும் நேராக அவரவர்கள் இருப்பிடத்தை அடைந்து விட்டோம். இதற்குப் பிறகு என்ன நடந்தது என்று எனக்குத் தெரியாது. வஜ்ஜிரகாயனின் மகன் பத்திரமாகத் தன் வீட்டை அடைந்து விட்டான் என்று கேள்விப்பட்டேன். ராஜராஜனும் தன் நாட்டை அடைந்து விட்டான். ஆனால் அவனது மனைவி அஜபலனோடு சேர்ந்து சதி செய்து அவனைக் கொன்று விட்டாள். ராஜராஜனின் மகன் சாமர்த்தியசாலி. அவன் அஜபலனைக் கொன்று பழி தீர்த்துக் கொண்டான்'' என்று கூறினான்.

தீரமதி ''ராஜராஜனைப் பற்றிக் கூறினீர்கள். அவர் துரோகச் செயலால் நயவஞ்சகமாகக் கொல்லப்பட்டதை அவரது மகன் அறிந்து அந்தக் கொலையாளியைப் பழிக்குப் பழியும் வாங்கி விட்டான். இது சரியான செயலே. உண்மையில் அவன் அதிர்ஷ்டசாலி ஆனால் என் வீட்டில் கூடி என் தாயை மணக்கப் போவதாகக் கூறும் அரசகுமாரர்களைப் பழிவாங்க முடியவில்லையே'' என்றான் வேதனைப்பட்டவாறே. நவத்யோதனனும் ''ஆமாம், நான் கூட அது பற்றிக் கேள்விப்பட்டேன். நீ ஏன் அவர்களது அட்டூழியங்களைச் சகித்துக் கொண்டிருக்க வேண்டும்? உனக்கும் உன் தந்தைக்குக் கிடைத்தது போல புத்திமதி தேவியின் அருள் கிடைத்தால் உன் எதிரிகளை எல்லாம் அடக்கி ஒடுக்கி விடுவாய்'' என்றான்.

தீரமதியும் ''தாங்கள் நினைப்பது போல நானும்தான் நினைக்கிறேன். அவர்களிடம் என் தந்தையைப் பற்றி

அறிந்து கொண்டு வருவதாகச் சவால் விட்டு அவர்களுக்கும் சிறிது காலம் அவகாசம் கொடுத்துவிட்டு வந்திருக் கிறேன். எல்லா தேவதைகளும் எனக் குத் துணை புரிந்தால்தான் நான் நினைத்ததைச் செய்து முடிக்கவும் முடியும்'' என்றான்.

அவர்கள் இவ்வாறு பேசிக் கொண் டிருக்க, மாலைப் பொழுதானதால் தீரமதி தன் கப்பலுக்குத் திரும்பிப் போவதாகக்கூறி எழுந்தான். ஆனால் நவத்யோதனனோ ''நீ இப்போது போகக் கூடாது இன்றிரவு நீ என் வீட் டில் தங்கி விட்டுத்தான் போக வேண் டும். என் அருமை நண்பனின் மக னுக்கு என் வீட்டு உபசரிப்பு இல்லா மல் அனுப்புவதா? முடியவே முடி யாது? என்றான். அதனால் சகசன் மட்டும் கப்பலுக்குத் திரும்பிச் சென் றான்.

அன்றிரவு நவத்யோதனனின் மாளி கையில் விருந்துண்டு நன்கு தூங்கி எழுந்த தீரமதி குளித்து நல்ல ஆடை களை அணிந்து கொண்டான். அவன் பிரதாபன் இருக்கும் இடத்திற்குப் போவதற்கு ஒரு நல்ல வண்டி ஏற்பாடு செய்யப்பட்டது. வழியில் உண்ண உணவுடன் நவத்யோதனின் மகன் ஒரு வனும் தீரமதியுடன் அந்த வண்டி யில் ஏறிக் கொண்டான். இருவரும் இரண்டு நாட்கள் பிரயாணம் செய்து பிரதாபனின் அரண்மனையை அடைந்தார்கள்.

அப்போது பிரதாபன் தன் மகளை வஜ்ஜிரகாயனின் மகனுக்குத் திரு மணம் செய்து வைத்துக் கொண்டிருந் தான். அந்தத் திருமணத்திற்கு சுற்றுப் பக்க ஊர்களிலிருந்து பலர் வந்தி



ருந்தனர். பலமான விருந்து நடந்து கொண்டிருந்தது. அப்போது ஒரு பணி யாள் பிரதாபனிடம் போய் ''அரசே! யாரோ இரு இளைஞர்கள் நேர்த்தி யான வண்டி ஒன்றில் வந்து இங்கு இறங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இங்கே அழைத்து வர உத்த ரவா?'' என்று கேட்டான்.

பிரதாபனும் ''மடையா! இது என்ன கேள்வி? இப்போது நம் வீட் டில் திருமணம் நடந்து கொண்டிருக் கிறது. நாம் நம் உறவினர்களையும், நண்பர்களையும் இதற்கு அழைத்தி ருக்கிறோம். அதனால் ஏராளமான பேர்கள் வரத்தான் வருவார்கள். நம் வீடு தேடி வந்திருப்பவர்களை வர வேற்று உபசரிப்பதுதான் முறை. அவர்கள் யாராக இருந்தாலும் மரி யாதையுடன் இங்கு அழைத்து வா'' என்றான். சற்று நேரத்தில் தீரமதியும் நவத்யோதனனின் மகனும் விருந்து

நடக்கும் இடத்திற்கு வந்து ஆச்சரியத்துடன் சுற்றிலும் பார்த்தார்கள். அவர்கள் குளிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. குளித்தபின் உடுக்கப் புத்தாடைகள் கொடுக்கப்பட்டன. பின்னர் அவர்கள் விருந்தில் அமர்த்தப்பட்டார்கள்.

அப்போது பிரதாபன் அவர்களிருக்கும் இடத்திற்கு வந்து ''இளைஞர்களே! உங்களைப் பார்த்தால் அரச குமாரர்கள் போல் தெரிகிறதே. நீங்கள் நிதானமாகச் சாப்பிட்டு விட்டு வாருங்கள். பிறகு பேசலாம்'' என்றான். சாப்பிடும் போதே தீரமதி தன் நண்பனிடம் ''இங்கு எவ்வளவு விலையுயர்ந்த பொருள்கள் இருக்கின்றன என்று பார்த்தாயா?'' என்று கூறினான்.

இது பிரதாபனின் காதில் விழுந்து விட்டது. அவனும் ''இளைஞர்களே! இவை எல்லாம் பல நாடுகளிலிருந்து சேகரித்து நான் கொண்டு வந்தவை. ஆனால் என் வீரர்களில் பலர் ட்ராய்க் கோட்டை முன் போரில் இறந்து போனார்கள். இவற்றைக் காணும் போதெல்லாம் அவர்கள் நினைவே எனக்கு வருகிறது. அந்த வீரர்களில் நான் மறக்க முடியாதவன் ரூபதரன் என்பவன். இரவு நேரங்களில் அவனைப் பற்றி நான் நினைக்கத் தொடங்கினால் எனக்குத் தூக்கமே வருவதும் இல்லை. எனக்கே இவ்வளவு துக்கம் என்றால் வயதான அவனது தந்தையும் அவனது மனைவியும் அவனது மகனும் எவ்வளவு வருத்தப்பட்டுக் கொண்டிருப்பார்களோ?'' என்று கூறினான்.

இதைக் கேட்டு தீரமதிக்கு துக்கம் பீறிட்டுக் கொண்டு வந்தது. அவனது கண்களில் கண்ணீர் பெருகியது. அதைக் கண்ட பிரதாபனுக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. ரூபதரனைப் பற்றிக் கூறியதும் அந்த இளைஞன் ஏன் கண் கலங்க வேண்டுமென்று யோசிக்கலானான். இதே சமயம் புவனசுந்தரி அங்கே வந்தாள். அவள் தீரமதியைப்



பார்த்தவாறே ''யார் இந்த இளைஞன்? பார்ப்பதற்கு ரூபதரனைப் போல இருக்கிறானே'' என்றாள். பிரதாபனும் ''ஆமாம். நானும் இப்போதுதான்கவனித்தேன். அப்படியே ரூபதரனை போலவே இருக்கிறான் தான்'' என்றான்.

நவத்யோதனனின் மகனும் பிரதாபனிடம் ''மகாராஜா! நீங்கள் நினைத்தது சரியே. இவன் ரூபதரனின் மகனே தான். ரூபதரன் இல்லாத காரணத்தால் சில அரசகுமாரர்கள் இதாகாவில் இவனது மாளிகையில் கூடிக் கொட்டம் அடித்துக் கொண்டிருக்கிறார்கள். இவனுக்கு ஏற்பட்டுள்ள சிக்கலைத் தீர்க்க நீங்கள் உதவி யோசனை கூற வேண்டும் என்பதற்காக என் தந்தை நவத்யோதனன் என்னை இவனுடன் இங்கு அனுப்பி வைத்திருக்கிறார்'' என்றான்.

பிரதாபனும் ''ரூபதரன் மகன் என் வீட்டிற்கு வந்துள்ளது என் அதிர்ஷ்டமே'' என்றான். அதன் பின் ரூபதரனைப் பற்றிய விவரங்களைச் சொல்லலானான். ரூபதரன் ஒரு அடிமை போல உருமாறித் தன் உடலில் சாயம் பூசிக் கொண்டு ட்ராய் நகரத்திற்குள் சென்றான். அப்படியும் புவன சுந்தரி அவனை அடையாளம் கண்டு கொண்டு விட்டாள். ட்ராய் நகரில் மரக் குதிரை இருந்த போது அதிலிருந்த வீரர்கள் ஒவ்வொருவரின் பெயரையும் புவனசுந்தரி கூறியதைச் சொன்னான். அவர்களில் சிலர் குதிரையினுள்ளிலிருந்து வெளியே குதிக்க முயன்றபோது ரூபதரன் அவர்களை எப்படித் தடுத்தான் என்பதனைக் கூறினான்.

அப்போது தீரமதி ''அரசே! என் தந்தையைப் பற்றிய தகவல் ஏதாவது தங்களுக்குத் தெரியுமா? அதை அறிந்து கொள்ளவே நான் இங்கே வந்திருக்கிறேன்'' என்றான். பிரதாபனும் ''எனக்குத் தெரிந்ததைக் கூறுகிறேன் கேள். நான் எகிப்து நாட்டில் இருந்த போது கடலிலிருந்து தப்பி வந்த ஒரு கிழவனைச் சந்தித்தேன். அவன் பலரைப் பற்றிக் கூறினான். ரூபதரனைப் பற்றிக் கூறும்போது அவன் ரூபதரன் தன் ஆட்களை இழந்து ஏதோ ஒரு தீவில் சம்மோகினியின் கைதியாக இருப்பதாகத் தெரிவித்தான்'' என்றான்.

**(தொடரும்)**



# அம்புலிமாமா செய்திகள்

## விசித்திரச் சிரிப்பு

புகழ் பெற்ற 'கின்னஸ் புக் ஆஃப் ரெகார்ட்ஸ்' போலவே ரிப்லெஸ் நிறுவனம் உலகின் பல பகுதிகளில் நடக்கும் விசித்திர சம்பவங்களை 'ரிப்லெஸ் பிலீவ் இட் ஆர் நாட்' என்னும் புத்தகம் வெளியிடுகிறது. அதில் நம்ப முடியாத பல விஷயங்கள் உள்ளன. அந்த நிறுவனம் தற்போது டெக்சாஸ் வாசிகளுக்கு ஒரு சிரிப்புப் போட்டியை ஏற்பாடு செய்துள்ளது. மிக விசித்திரமாகச் சிரிப்பவருக்கு 150 டாலர்கள் பரிசளிக்கிறது. போட்டியில் கலந்து கொள்பவர் அந்த நிறுவனத்துடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டு சிரிக்க ஆரம்பிக்க வேண்டும். இச்சிரிப்பு உடனே பதிவு செய்யப்படும். மிக விசித்திரமாகச் சிரித்தவர் பிறகு தேர்ந்தெடுக்கப்படுவார்.

## நீதிமன்றம் சென்ற நாய்

அமெரிக்காவில் லாஸ் ஏஞ்சல்ஸில் ஹெரால்ட் மார்ஷ் என்ற வழக்கறிஞர் டெவில் மார்ஷ் என்ற நாயை மூன்று ஆண்டுகளாக வளர்த்து வருகிறார். அவர் ஹோட்டலுக்குச் செல்லும் போது தம்முடன் தம் நாயையும் அழைத்துச் செல்வார். ஒருநாள் ஹோட்டல் அதிபர் நாய் ஹோட்டலுக்குள் வரக் கூடாது என ஆட்சேபித்தார். சுகாதார அதிகாரிகள் அவ்வாறு தடை செய்ய உத்திரவு பிறப்பித்துள்ளதாக அவர் கூறினார். அவ்வளவுதான். நாயின் தரப்பில் ஹெரால்ட் மார்ஷ் நீதி மன்றத்தில் வழக்கு தொடுத்தார். நாய் பல நூற்றாண்டுகளாக மனிதனோடு இருந்து வரும் பிராணி என்றும் வெறிபிடித்த நாயைத் தவிர வேறு எந்த நாயையும் எங்கும் தடை செய்யக்கூடாது என்றும் அவர் வாதம் புரிந்தார்.

## காலண்டர் சாதனை

ஒழுங்கற்ற பக்கங்கள் கொண்ட மூன்று புத்தகங்களில் 2500 பக்கங்கள் உள்ளன. இவற்றின் மதிப்பு 5000 ரூபாய்! இம்மூன்று புத்தகங்களின் ஒரே ஒரு பிரதிதான் உள்ளது. இதில் என்ன விஷயம் அடங்கியுள்ளதா? வெறும் காலண்டர் கி.பி. 1 முதல் 10000 ஆண்டு வரையுள்ள நாட்கள், தேதிகள் முதலியன இவற்றில் உள்ளன. 9999 ஜுன் 1ந் தேதி என்ன கிழமை எனப் பார்க்க மூன்றாவது புத்தகத்தை எடுக்க வேண்டும். இந்தப் புத்தகங்களை சென்னை மேற்கு மாம்பலத்தைச் சேர்ந்த குமார் என்ற இளைஞர் தயாரித்திருக்கிறார். 10,000 காலண்டர்களை தயாரிக்க இவருக்கு 48 நாட்கள் பிடித்தனவாம். மாவட்ட அதிகாரி, ரோட்டரி கிளப், அரிமா சங்கம், ஜுனியர் சேம்பர் ஆகியவற்றின் உறுப்பினர்களின் முன் குமார் இதனைச் செய்து முடித்தார். அவர்கள் அளித்த சான்றிதழ்களோடு இவர் 'கின்னஸ் புக்'கிலும் இடம் பெற்று விட்டார்.






# தந்தையின் பரீட்சை

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தில் ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கி அவன் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே இந்த பயங்கர நடுநிசியில் ஏன் இப்படி ஒரு கடினமாக வேலையைச் செய்ய முயல்கிறாய்? நீ உன் அன்புத் தந்தைக்கோ அல்லது மரியாதைக்குரிய ஆசிரியருக்கோ எதாவது வாக்குக் கொடுத்து விட்டு அதை நிறைவேற்ற முயல்கிறாயா? சில சமயங்களில் இது விபரீதமான முயற்சியாகக் கூட ஆகி விடும். இதற்கு உதாரணமாக நாகேந்திரன் என்பவனின் கதையைக் கூறு கிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

''ஆதித்தபுரத்தில் நாகேந்திரன் என்ற பெரிய வியாபாரி இருந்தான். அவனது ஒரே மகன் ராஜேந்திரன் அவன் நல்ல புத்திசாலி ஆனால் துடுக்

## வேதாளம் சொல்லும் கதை



கானவன். அவன் தனது தந்தை வியாபாரம் செய்து சம்பாதித்த பணத்தைக் கண்டபடி செலவு செய்யலானான். அவனிடம் நாளடைவில் கெட்ட பழக்கங்களும் படிந்து விட்டன.

தன் மகனின் போக்கைக் கண்டு நாகேந்திரன் தன் மகனைப் எப்படித் திருத்துவது என்று யோசிக்கலானான். அவனுக்குச் சுலபமாகச் பணம் கிடைப்பதால்தானே அவனை அவனது சகபாடிகள் குடி, சூது என்றெல்லாம் கெட்ட வழிகளில் இழுத்துச் செல்கிறார்கள். அவனுக்குத்தான் பணம் கொடுக்காமல் இருந்து விட்டால் அவனால் இம்மாதிரி ஆட்டம் எல்லாம் ஆட முடியாது. அவனிடம் பணம் இல்லாதது கண்டு அவனது சகபாடிகள் அவனைவிட்டு ஓடிப்போய் விடுவார்கள். இப்படி அவன் யோசித்து ஒரு முடிவிற்கு வந்தான்.

ஒருநாள் நாகேந்திரன் தன் மகனிடம் ''ராஜேந்திரா! நீயோ பெரியவனாகி விட்டாய். உனக்கு நான் அறிவுரை சொல்லத் தேவையில்லை. ஆனால் நீ வழி தவறி நடப்பது கண்டு வேதனைப்படுகிறேன். நீ கேட்கும் போதெல்லாம் நான் உனக்குப் பணத்தைக் கொடுத்து விடுவதால் உனக்குப் பணத்தின் அருமை தெரியவில்லை. இனிமேல் நீ உன் செலவிற்கு நீயே பணத்தைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டும்'' என்றான்.

அது கேட்டு ராஜேந்திரன் திகைத்துப் போனான். முதலில் தன் தந்தை பணம் கொடுக்காது போனால் தன் நிலை என்ன ஆகும் என்று அவன் கவலைப்பட்டான். ஆனால் தன் நண்பர்களை அணுகினால் அவர்கள் கண்டிப்பாகத் தனக்கு உதவி புரிவார்கள் என்று எண்ணி அவன் தன் மனதைத் தேற்றிக் கொண்டான். அதனால் தன் தந்தை முன் தான் அவரது பணம் கிடைக்காததால் சற்றும் கவலைப்படாதவன்போல் அவர்கூறியது போலச் செய்வதாகக் கூறினான். அவனுக்கு வியாபாரம் செய்ய விருப்பமே அதற்கு முதல் போடத் தன் தந்தையிடம் பணம் கேட்க விரும்பவில்லை. நண்பர்களைக் கேட்டால் அவர்கள் தம்மை வியாபாரத்தில் கூட்டாளிகளாகச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று நிபந்தனை விதித்தார்கள். அதனால் அ்வன் வெட்கத்தை விட்டுத் தன் தந்தையிடமே பணம் கேட்டான்.

நாகேந்திரனும் ''பணம் இருந்தால் மட்டும் எல்லாராலும் வியாபாரம் செய்து விட முடியுமா? அதற்குத் தனி சாமர்த்தியம் வேண்டும்'' என்றான்.

ராஜேந்திரனும் ''அந்த சாமர்த்தியம் எல்லாம் எனக்கு வந்து விடும். எனக்கு ஆயிரம் வராகன்கள் கடனாகக் கொடுங்கள். கடன்பத்திரமும் எழுதித் தருகிறேன்'' என்றான். அப்போது நாகேந்திரன் ''நான் உனக்குப் பணம் கொடுக்க வேண்டும் என்றால் நீ முதலில் உனக்கு சாமர்த்தியம் இருப் பதை நிரூபித்துக் காட்ட வேண்டும். அதற்கு நானே ஒரு பரீட்சை வைக் கிறேன்'' என்றான்.

''ஆதித்தபுரத்திலிருந்து இருபது கல் தொலைவிலுள்ள இந்துபுரத்தில் மணி கண்டன் என்றும் நீலகண்டன் என்றும் இரு வியாபாரிகள் இருந்தார் கள். அவர்களுக்கு அபூர்வ சக்தி உள்ள தாம். எந்த வேலையையும் செய்ய அவர்கள் இருவரிடமும் ஆறு மாத காலம் பணி புரிந்தால் போதுமாம்.

இதனை நாகேந்திரன் தன் மகனி டம் கூறி ''நீ அவர்கள் ஒவ்வொரு வரிடமும் ஆறு மாதம் வீதம் ஒருவருட காலத்திற்குப் பணிபுரிந்து விட்டு வந்து அவர்களில் யார் நல்ல அறிவாளி என்று கூறு. ஆனால் மணிகண்டன் கொடியவனாம் கோபம் வந்தால் சபித்து விடுவானாம். நீலகண்டனோ நல்லவனாம். ஆசிகள் அளிப்பானாம். எனவே எச்சரிக்கையுடன் நடந்து உன் முடிவைக் கூறு'' எனக் கூறி ராஜேந் திரனை இந்துபுரத்திற்கு அனுப் பினான்.

ராஜேந்திரன் கையில் ஒரு காசுகூட இல்லாமல் சென்றாலும் அவனுக்குத் தன் பெயரைச் சொன்னாலே தன் மக னுக்குப் பணம் கிடைக்க நாகேந்திரன் ஏற்பாடு செய்திருந்தான். முதலில் ராஜேந்திரன் மணிகண்டனின் வீட்டிற்



குச்சென்றான். அவன் மணிக்கண்டனி டம் ''நான் ஆதித்தபுரத்து வியாபாரி யின் மகன். தங்களோடு கொஞ்ச காலம் இருந்து வியாபாரம் பற்றிய எல்லா விஷயங்களையும் அறிந்து கொள்ள விரும்புகிறேன். இதற்கு நீங்கள் எனக்கு அனுமதி அளிக்க வேண்டும்'' என்று வேண்டினான். மணிகண்டனும் அவன் வந்த கார ணத்தை அறிந்து ''சரி. நீ என் வீட்டில் என் நண்பனைப் போல இரு. ஏதாவது சந்தேகம் வந்தால் என்னிடம் தாராள மாகக் கேள். ஆனால் எனக்குக் கோபம் வரும்படி எதுவும் செய்யாதே. அப்ப டிச் செய்தால் உன்னை சபித்து விடு வேன்'' என்றான்.

மணிகண்டனுக்கு ரத்தினம் என்ற ஏழு வயது மகனும் மாலா என்ற ஐந்து வயது மகளும் இருந்தனர். அவர்கள் எல்லாவற்றிற்கும் ராஜேந்திரனைக் கேட்டு அவன் சொல்கிறபடியே



நடந்து வந்தார்கள். அவர்களுக்கு அவன் கூறுவதே வேதவாக்கு. மணி கண்டன் எவ்வளவோ வியாபாரத் தந்திரங்களைக் கூறினான். பண்டங் களை எப்படிச் சேகரித்து எப்போது விற்பது என்றும் வாடிக்கையாளரின் நம்பிக்கையை எப்படித்தக்கவைத்துக் கொள்வது என்றும் கூறி வரலானான்.

ஒருநாள் ராஜேந்திரன் மணி கண்டனிடம் ''நீங்கள் கூறுவது வியா பாரத்திற்கு ஏற்றதாக இருந்தாலும் நேர்மை, நாணயம் முதலியவற்றை எல்லாம் விட்டு விட வேண்டும் போலிருக்கிறதே. இவற்றைக்கடைப் பிடித்து வியாபாரம் செய்ய எதாவது வழி இருந்தால் கூறுங்கள்'' என்று கேட்டான்.

மணிகண்டனும் ''வியாபாரத்தில் பொய், பித்தலாட்டம், மோசடி என்ப தெல்லாம் இருக்கத்தான் இருக்கும். ஆனால் இவற்றைச் செய்தவாறே நல்லவனைப் போல நடிக்க வேண் டும். சட்டத்தின் பிடியில் அகப்படா மல் நழுவ வேண்டும்'' என்றான். அன்று மாலை ராஜேந்திரன் மணி கண்டன் கூறியவற்றை ரத்தினத்திட மும் மாலாவிடமும் கூறினாள். அவர் களும்தாம் பெரியவர்களானதும் அதே முறைகளைக் கையாண்டு வியாபாரம் செய்யப் போவதாகக் கூறினார்கள்.

தன் குழந்தைகளிடம் ஏற்பட்டு வரும் மாறுதல்களை கவனித்த மணி கண்டன் அதற்குக் காரணம் ராஜேந் திரன் எனத் தெரிந்து கொண்டான். அத னால் அவன் ராஜேந்திரனைக் கூப் பிட்டு ''நான் உனக்கு வியாபார தந்தி ரங்களைக் கூறினால் நீ அவற்றை என் குழந்தைகளிடம் கூறி அவர்களைக் கெடுக்கிறாயா? அவர்களிடம் நீ பொய், புரட்டு, சூது, வாது, மோசடி முதலியவற்றை செய்தே வியாபா ரத்தை நடத்த வேண்டும் என்றும் அவர்கள் வளர்ந்து பெரியவர்களாகி வியாபாரம் செய்து நான் கூறிய முறை யில் நடக்க வேண்டும் என்றா கூறு கிறாய்?'' என்று கோபத்தோடு கேட் டான் ராஜேந்திரனும் ''நீங்கள் எனக் குக் கூறிய நல்ல அறிவுரைகளையே நான் அவர்களுக்குக் கூறினேன்'' என் றான். மணிகண்ட னும் ''வியாபாரம் என்றால் பொய், பித்தலாட்டம், மோசடி என என் குழந்தைகளின் மனதில் பதிந்து அவர்கள் வியாபாரம் செய்வதை நான் விரும்பவில்லை'' என்றான்.

ராஜேந்திரனும் ''ஆனால் அவற் றைச் செய்வது தவறில்லை என்று எனக்கு நீங்கள் போதிக்கிறீர்களே'' எனவே மணிகண்டனும் ''உலகிற்கு

வியாபாரம் இன்றியமையாதது. எனவே மற்றவர்கள் வியாபாரம் செய்ய நான் ஊக்கமளிக்கிறேன். என் குழந்தைகள் வியாபாரம் செய்ய நினைக்கக் கூடாது. எனவே அவர்களது எண்ணத்தை மாற்று'' என்றான். அது கேட்டு ராஜேந்திரன் ''உங்கள் குழந்தைகளுக்கு ஒரு நியாயம், பிறருக்கு ஒரு நியாயம் என்று தாங்கள் கூறுவது சரியா? வியாபாரம் மக்களுக்குத் தேவை என்றால் உங்கள் மக்களும் அதை ஏன் செய்யக் கூடாது?'' என்று கேட்டான்.

இதைக் கேட்ட மணிகண்டன் கோபம் கொண்டு ''அடே! என்னையே எதிர்த்துப் பேசுகிறாயா? உன்னை என் என் வீட்டில் தங்க வைத்ததே தப்பு. மேலும் என் குழந்தைகளோடு உன்னை பழக விட்டது தப்பு. நீ இங்கே இருந்தால் என் குழந்தைகள் கெட்டுப் போய் விடுவார்கள். உன்னை நான் பார்க்க விரும்பவில்லை. இப்போதே இங்கிருந்து நீ போய்விடு. இனி தினமும் உனக்கு ஏதாவது ஒரு விபத்து ஏற்படட்டும்'' என்று சபித்தான். ராஜேந்திரன் இனி தான் அங்கே இருக்க முடியாது என அறிந்து அவ்வீட்டை விட்டு வெளியே வந்தான். அவன் தெருவில் சற்று தூரம் போனதும் ஒரு வாழைப்பழத் தோலின் மீது காலை வைத்து வழுக்கி விழுந்தான். அப்போது அவ்வழியே வந்த ஒருவர் அவனை ஒரு வைத்தியரின் வீட்டிற்கு அழைத்துப் போய் விட்டு விட்டுச் சென்றார். வைத்தியரும் அவன் கால் சுளுக்கை எடுத்து விட்டு அவன் எப்படிக் கீழே விழுந்தான் என்று கேட்டார்.



ராஜேந்திரனும் ''நான் ஆதித்தபுரத்தைச் சேர்ந்தவன். வியாபாரம் பற்றிய நுணுக்கங்களை அறிந்து கொள்ள இவ்வூருக்கு வந்து மணிகண்டன் என்பவர் வீட்டில் தங்கி அவரிடமிருந்து வியாபார முறைகளைக் கற்கலானேன். இன்று அவர் என்னைக் கோபித்துக் கொண்டு வீட்டை விட்டுப் போகும் படியும். இன்று முதல் எனக்கு தினமும் ஏதாவது ஒரு விபத்து ஏற்பட்டுக் கொண்டிருக்கும் எனக் கூறினார். அவரது வீட்டை விட்டு வந்ததுமே ஏற்பட்ட விபத்துதான் இது'' என்று விவரமாகக் கூறவே வைத்தியரும் ''அடடா! மணிகண்டன் சபித்து விட்டானா? அப்படியானால் இனி தினமும் உங்களுக்கு இப்படி ஏதாவது ஒரு விபத்து நேருமே!'' என்றார். ராஜேந்திரனும் சிரித்துக் கொண்டே ''அப்படியானால் தினமும் உங்களிடம் வந்து சிகிச்சை பெற்றுக் கொள்கிறேன்''



என்றான்.

வைத்தியர் சற்று யோசித்து ''உங்களுக்கு வைத்தியம் செய்யச் சொல்லி எனக்கு ஆதித்தபுரக் கட்டளை வந்துள்ளது சரி. இனி நீங்கள் போய் நீலகண்டனுக்குப் பணிபுரிந்தால் அவரது ஆசிகளால் விபத்துகள் விலகும். உங்களை இங்கே கொண்டு வந்து விட்டவரே நீலகண்டன்தான்'' என்றார். ராஜேந்திரனும் உடனே நீலகண்டனின் வீட்டிற்குச் சென்றான். அவன் தன்னைப் பற்றி முழுவிவரங்களையும் கூறவே நீலகண்டனும் ''தம்பீ! வியாபாரம் மக்களுக்குப் பணிபுரியும் நோக்கத்தோடும் பிறருக்கு உதவுவதாகவும் இருக்க வேண்டும். இவை யாவும் அனுபவத்தால் தெரிந்து கொள்ள வேண்டியவை. நீ வியாபாரத்தை இங்கேயே தொடங்கு. நான் முதலீடு செய்கிறேன். லாபத்தை நாம் சமமாகப் பகிர்ந்து கொள்ளலாம்'' என்றான்.

அதைக் கேட்ட ராஜேந்திரன் ஆச்சரியம் அடைந்தவனாய் ''தாங்கள் இவ்வளவு கருணையுடன் என்னை ஏன் வியாபாரம் செய்யச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான். நீலகண்டனும் ''ஒவ்வொருவரும் தம் தொழிலைச் செய்து பணம் சம்பாதிக்கிறார்கள். வியாபாரத்தில் கலப்படம் செய்யாமல் பிறரை ஏமாற்றாமல் நேர்மையாக நடப்பது சரியே. நீ நல்லவனாகக் காணப்படுகிறாய். வியாபாரத்தில் நேர்மையைக் கடைபிடித்து நாணயத்துடன் நடக்க விரும்புகிறாய். இம்மாதிரி நோக்கத்துடன் வியாபாரம் செய்ய முன் வருபவர்கள் மிகவும் அரிது. நீ இப்போது இவற்றைக் கடைப்பிடித்து வியாபாரம் செய்ய விரும்புவதாகக் கூறுகிறாய். அதனால்தான் உன் வியாபாரத்தில் கூட்டாளியாக இருக்க நான் விரும்புகிறேன்'' என்றான். ராஜேந்திரன் அது கேட்டு மகிழ்ந்து உடனே வியாபாரத்தை ஆரம்பித்தான். நீலகண்டனின் ஆசிகளால்தானோ என்னவோ அவனது வியாபாரம் நன்கு நடைபெற்றது.

நீலகண்டன் ஆயிரம் வராகன்களை ராஜேந்திரனுக்குக் கொடுத்து அதை அவனது முதலீடாக வைக்கச் சொன்னான். முதல் மாதத்தில் ஐநூறு வராகன் லாபம் வரவே அதில் பாதியை நீலகண்டனுக்குக் கொடுத்தான். இரண்டாவது மாதத்தில் ஆயிரம் வராகன்கள் லாபம் கிடைக்கவே அதில்பாதியை அவன் நீலகண்டனுக்குக் கொடுத்தான். இப்படியே ஒவ்வொரு மாதத்திலும் லாபம் அதிகரித்துக் கொண்டே போயிற்று.

ஆயிரம் வராகனைக் கொடுத்து, நீலகண்டன் அதைப் போலப் பன் மடங்கு பணம் லாபமாகப் பெறு வதை ராஜேந்திரன் கவனித்தான். ஒருநாள் அவன் நீலகண்டனிடம் ''ஐயா, நீங்கள் கொடுத்த ஆயிரம் வராகனை வட்டியோடு சேர்த்துக் கொடுத்து விடுகிறேன். இனிமேல் நீங்கள் என் கூட்டாளியாக இருக்க வேண்டாம்'' என்றான். நீலகண் டனோ ''நீ முதல் போட்டது என் பணம். அதனால் வியாபாரம் என் னுடையதே. லாபத்தில் மட்டும்தான் இருவருக்கும் சமபங்கு! அதனால் நீ எப்போதும் எனக்கு லாபத்தில் பாதி யைக் கொடுத்துக் கொண்டேதான் இருக்க வேண்டும்'' என்றார்.



ராஜேந்திரனோ ''நம் வியாபாரத் திற்கு எழுத்து மூலம் ஒப்பந்தம் இல்லை. நாம் இருவரும் பேசியே இந்தக்கூட்டு வியாபாரத்தை ஆரம்பித் தோம். வியாபாரத்தை நான் நடத்தி லாபம் பெற்றுத் தந்து கொண்டிருக் கிறேன். நீங்களோ முதலில் என்னிடம் ஒரு ஆயிரம் வராகன்களைக் கொடுத்து விட்டு பல்லாயிரம் வராகன்களை லாபமாக அடைந்திருக்கிறீர்கள். நான் இனியும் தங்கள் கூட்டாளியாக இருக்க விரும்பவில்லை. நீங்கள் கொடுத்த ஆயிரம் வராகன்களை வட்டியோடு திருப்பிக் கொடுத்து விட்டு இந்தக் கூட்டிலிருந்து விலகிக் கொள்கிறேன். இனி நீங்கள் என் கூட்டாளியல்ல. உங்களை இனி நான் பார்க்கவும் மாட்டேன். அதனால் நான் வியாபாரத்தை நடத்தாமல் என் ஊருக் குப் போய் விடப் போகிறேன்'' என் றான். அப்போது நீலகண்டன் ''அப் படியானால் உனக்கு ஏற்படப் போகும் கஷ்ட நஷ்டங்களுக்கு நான் பொறுப்பல்ல'' என்று கூறினான். ராஜேந்திரன் எதுவும் கூறாமல் தெருவில் இறங்கி நடந்தான். அப் போதும் ஒரு வாழைப் பழத் தோலின் மீது காலை வைத்து வழுக்கி விழுந் தான்.

யாரோ ஒருவன் அவனை வைத்தி யரின் வீட்டில் கொண்டு போய்ச் சேர்த் தான். வைத்தியரும் அவனது கால் சுளுக்கை எடுத்து விட்டு ''மணிகண்ட னின் சாபமும் நீலகண்டனின் ஆசியும் பலனளிப்பது இந்த இந்துபுரத்திற்குள் தான். நீ இவ்வூரை விட்டுப் போய் விட்டால் அவை உனக்குப் பலிக்காது. அதனால் நீ உடனே இந்த ஊரை விட் டுப் போய் விடு'' என்று கூறினார். ராஜேந்திரனும் உடனே அந்த ஊரி லிருந்து கிளம்பி ஆதித்தபுரத்தை அடைந்தான்.

அவன் தன் தந்தையைக் கண்டு ''மணிகண்டனும் நீலகண்டனும் சுய நலமிகள். கொடியவர்கள். இருவரும் என்னைச் சபித்து விட்டார்கள்'' என்றான். நாகேந்திரனும் ''சரி. நீ வியாபாரம் செய்யத் தகுதி பெற்றவனல்ல. ஆடு மாடுகளை வளர்த்து விவசாயத்தை கவனித்து வா'' என்று கூறி விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''நாகேந்திரன் மகனைப் பற்றி எடுத்த முடிவு சரியா? ராஜேந்திரன் தன் அனுபவத்தைக் கொண்டு தானே மணிகண்டனையும் நீலகண்டனையும் சுயநலமிகள் என்றும் கொடியவர்கள் என்றும் கூறினான். ஆனால் நாகேந்திரன் அவ்விருவரில் ஒருவனை நல்லவனாகக் கருதினான் இது ஏன்? இக்கேள்விகளுக்கு பதில் தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''மணிகண்டன் கொடியவன். இதில் சந்தேகமில்லை. நீலகண்டன் அப்படியல்ல. மணிகண்டன் போதிப்பது ஒன்று. தன் வாழ்க்கையில் அதற்கு நேர்மாறாக நடப்பவன். நீலகண்டன் நான் சொல்கிறபடி நடந்துகாட்டுபவன். ராஜேந்திரனுக்கு வியாபாரத்திற்கு முதல் போடப் பணம் கொடுத்து தன் நல்லாசிகளையும் அளித்தவன். மேலும் மணிகண்டன் ராஜேந்திரனுக்குக் அளித்த சாபத்தை நீலகண்டனின் ஆசி முறியடித்து வந்தது. இதன் காரணமாகத் தான் அவனுக்கு மணிகண்டனின் சாபப்படி விபத்து ஏற்படவில்லை. அதிலிருந்து நீலகண்டனின் ஆசிகள் காத்து வந்தன. ஆனால் ராஜேந்திரன் நீலகண்டனை விட்டுப் பிரிந்ததும் அவனது ஆசி கிடைக்கவில்லை. மறுபடியும் மணிகண்டனின் சாபம் பலித்தது. இதை எல்லாம் யோசித்து பாராமல் ராஜேந்திரன் இருவரையும் கொடியவர்கள், சுயநலமிகள் என்று கூறியது சரியல்ல. அதனால்தான் வியாபாரத்திற்கு அவன் தகுந்தவனல்ல என நாகேந்திரன் தீர்மானித்தான். இது சரியான முடிவே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# கர்நாடகத்திற்குத் தெற்கே

கருத்து: **மீராநாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**

கோவா கடற்கரையைக் கடந்து சென்றால் நாம் நம்நாட்டின்நேர்த்தியான துறைமுகங்களில்ஒன்றான மர்ம கோவாவை அடைகிறோம். இத்துறைமுகத்திலிருந்து இரும்பு, மாங்களிசம் போன்ற தாதுப் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.




மர்ம கோவாவிலிருந்த சற்று தூரத்தில் இம் மாநிலத்திலேயே மிக நீளமான கோல்வா கடற்கரை உள்ளது. கோல்வாவிலிருந்து காபோ.டி.ராமா வரை ஒரே வெள்ளை மணல் இங்கு ராமர் தம் வனவாசத்தின் போது சில நாட்களைக்கழித்தாராம். இங்கிருந்து 25 கி.மீ. தள்ளி பெஹாலீம் என்ற கிராமத்தில்தான் ராமர் எய்த அம்புவிழுந்ததாம்.

கோல்வாவில் பிரபல சர்ச் இக்ரேஜாடி, நோஸா சென்றோராடி பியடாட் என்பதாம். இதில் மெனினோ (குழந்தை) ஜீசஸின் சிலை உள்ளது. இதற்கு எந்த வலியையும் போக்கும் சக்தி உண்டாம்.

போலெம் கோவாவின் தென்பகுதியிலுள்ள கடற்கரை. இந்தக் கடற்கரை கோவாவிற்கும் கர்நாடக மாநிலத்திற்கும் மிக அருகே உள்ளது. இங்கு சுற்றுலாப் பயணிகள் வருவது இல்லை.



**கோல்வா கடற்கரை**

கர்நாடகத் கடற்கரைப் பகுதியும் பரசுராமர் கடலில் அம்பு எய்து உண்டாக்கிய நிலப்பகுதி தான் எனக் கருதப்படுகிறது. இப்பகுதியில் கார்வார் மிக அழகான இடம். இதன் மூன்று பக்கங்களிலும் கடற்கரைகள் உள்ளன. இது ஒரு இயற்கைத் துறைமுகம். வருடம் முழுவதும் பயன்படும் இத்துறை முகத்தை மும்பயிலிருந்து கொழும்பு செல்லும் கப்பல்கள் பயன்படுத்திக் கொள்கின்றன.


காவார்

அராபியர் இதை பெய்ல் ஏகோல் எனக் குறிப்பிட்டு உள்ளனர். இதன் வழியாக மஸ்லின் துணி, மிளகு, ஏலக்காய் முதலியன ஏற்றுமதி செய்யப்பட்டன.

இங்குதான் கவியரசர் ரவீந்தர் தம் முதலாவது நாடகமான பிராகிருதீர் பிரதிஷோத்தை கவிதை வடிவில் எழுதினார். அப்போது அவரது சகோதரர சத்தியேந்திர நாத டாகுர் கார்வார் மாவட்ட நீதிபதியாக இருந்தார்.

கார்வாரிலிருந்து சற்று தூரத்தில் அங்கோலா என்ற பழங்காலத் துறைமுகம் உள்ளது. கடம்பர்கள், சாளுக்கியர்கள், விஜயநகர ஆட்சி காலங்களில் இது சிறந்து விளங்கியது. நம் விடுதலைப் போர் இயக்கங்களில் இங்கு உப்பு சத்தியாக்கிரகமும் வரிகொடா இயக்கமும் வெற்றிகரமாக நடைபெற்றன.

இங்கிருந்து எட்டு கி.மீ. தொலைவில் ஹொன்னேபால் ஜைனக் குகைகள் உள்ளன.


**ரவீந்திரநாத் டாகுர்**


**அங்கோலாவில் பல இயக்கங்கள்**

மகாபலேஷ்வர
ஆலயம்

சந்தன
மரவேலைப்பாடு

கார்வாரிலிருந்து 60 கி.மீ. தொலைவில் கோகர்ணம் உள்ளது. இது தென்னிந்திய காசி என அழைக்கப்படுகிறது. இது சிவஸ்தலம். இங்குள்ள மகாபலேஷ்வர் ஆலயத்தில் ஆத்மலிங்கம் புகழ் பெற்றது. இராவணன் பல ஆண்டுகள் தவம் செய்து இதனை அடைந்து தூக்கி வந்தானாம். அப்போது விநாயகர் அவனைத் தந்திரத்தால் அதைக் கீழே வைக்க வைத்தாராம். வைக்கப்பட்ட லிங்கத்தை இராவணனால் தூக்கி எடுக்க முடியவில்லை. எனவே இந்த லிங்கம் 'மகாபல' என்ற பெயரைப் பெற்றது. தரை மட்டத்திலிருந்து இரண்டு அங்குலத்து இதன் பாகமே தென்படுகிறது. பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடக்கும் அஷ்டபந்தனத் திருவிழாவின் போதுதான் இந்த லிங்கத்தை முழுவதுமாகக் காண முடியும்.

இதற்கு இன்னமும் தெற்கே கும்டா என்னும் நகர் உள்ளது. கர்நாடகத்தின் திறமைமிக்க மரவேலைக்காரர்கள் குடிகார்களுக்கு இவ்வூர் பெயர் பெற்றது.

கும்டாவிலிருந்து சற்று தூரத்தில் ஹோநாவர் நகரம் உள்ளது. இது பழங்காலத்தில் ஹொன்னூரு (தங்க நகரம்) எனப் பெயர் பெற்றது. இது இராமாயண காலத்து ஊர் எனக் கருதப்படுகிறது. இங்கு ராமரால் அமைக்கப்பட்ட ராம தீர்த்தம் என்ற ஊற்று உள்ளதென மக்கள் கருதுகிறார்கள். ஹைதர் அலிகாலத்தில் இது நல்ல துறைமுகமாயும் வணிக மையமாயும் விளங்கியது. கர்நாடகாவின் மிக நீளமான ஷராவதி பாலம் இங்குதான் உள்ளது.

வேலையில்
மூழ்கிய குடிகார்

ஷராவதி பாலம்



பட்கல்
ஆலயத்திலுள்ள ஒரு
பாம்பாட்டி சிற்பம்



சந்திரநாதேஷ்வர
ஆலயத்திலுள்ள
சந்திரநாதேஷ்வர
தீர்த்தங்கர் சிலை.

வட கர்நாடகத்தில் பட்கல் ஜைன ஆலயங்களுக்குப் பெயர் பெற்றது. இவை மொத்தம் 13 ஆலயங்கள். இவற்றில் மிகப் பெரியது 500 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட சந்திரநாதேஷ்வர ஆலயம்.

பட்கலுக்கு ஆறு கி.மீ. தொலைவில் நேத்ரானித் தீவு உள்ளது. ஆங்கிலேயர் இதைப் புறாத் தீவு எனக் குறிப்பிட்டனர். ஏனெனில் இங்கு புறாக்கள் நிறைய உள்ளன. சீனாவிலிருந்து வந்து இங்கு தங்கும் ஒருவகைப் பறவைகளின் 'சூப்' மிகவும் பெயர் பெற்றது.



யட்சகான நடனக் கலைஞர்

இன்னும் சற்றுத் தெற்கேயுள்ள குண்டப்பூர் யட்சகானத்திற்குப் பெயர் பெற்ற இடம். இந்த நடனம் கர்நாடகத்தின் சிறப்பு அம்சமாகும்.

இந்தக் குண்டப்பூரில்தான் கன்னட மொழியின் புகழ் பெற்ற கவிஞர் முத்தண்ணா வாழ்ந்தவர். இவரது இயற் பெயர் நந்தலிகே லட்சுமி நாராயணப்பா என்பதாம் இவர் இங்குள்ள அரசினர் உயர்பள்ளியில் உடற்பயிற்சி ஆசிரியராகப் பணிபுரிந்தவாறே 'ஸ்ரீராம அஸ்வமேதம்' என்ற காவிய நூலைக் கன்னடத்தில் படைத்தார்.




# உயர்ந்தவர் யார்?

பூவனகிரியில் பெரும் பணக்காரன் பூபாலன். அவனது மகன் ஜெய பாலன் பக்கத்து ஊரிலிருந் குரு குலத்தில் ஐந்து வருடங்கள் கல்வி பயின்று விட்டுத் தன் ஊருக்கு வந் தான். அவன் தன் தந்தைக்கு உதவியாக விவசாய வேலைகளைச் செய்து வர லானான்.

ஜெயபாலன் நல்லவனே. ஆனால் பிறரோடு பேசும் போது அவன் தன்னைப் பற்றிப் பெருமை அடித்துக் கொள்வான். அவ்வாறு கூறிக் கொள் வது சரியல்ல என்று அவனது தந்தை பூபாலன் பல முறைகளில் அறிவுறுத் திய போதிலும் ஜெயபாலன் அதனை ஏற்காமல் ''நான் என்னிடம் உள்ள எனது சிறப்பு அம்சங்களைத்தானே கூறுகிறேன். என்னிடம் உள்ளதைக் கூறுவது தவறா? எனக்கு இந்த சிறப்பு அம்சங்கள் நான் குருகுலத்தில் படித்த போது கிடைத்தன. நான் என்னிடம் இல்லாத குணங்களைக் கூறிப் பெரு மைப் பட்டுக் கொள்ளவில்லையே'' என்றான்.

தன் மகன் கூறிய சமாதானம் பூபால னுக்கு ஏற்றதாக இல்லை. சில நாளுக் குப் பிறகு அவனது மைத்துனன் அவ னது ஊரிலிருந்து அவனைக் காண வந் தான். அப்போது பூபாலன் ''மாதவா! என் மகனை எப்படித் திருத்துவது என்று தெரியவில்லை. அவன் தற் பெருமை அடித்துக் கொள்வதை நிறுத்த ஏதாவது வழி சொல்'' என்று கேட்டான்.

மாதவனும் ''கவலைப்படாதீர் கள்? அவனை என் ஊருக்கு அனுப்பி வையுங்கள். அவன் தற்பெருமை அடித்துக் கொள்வதை நிறுத்தி புத்தி சாலித்தனமாக நடக்குமாறு மாற்றி விடுகிறேன்'' என்று கூறி விட்டு மறு நாள் தன் ஊருக்குச் சென்று விட்டான். மாதவன் கிளம்பிப் போய் மூன்று நாட் களானதும் பூபாலன் தன் மகனிடம் ''ஜெயபாலா! உன் தாய் மாமன் மாதவன் உன்னை அனுப்பி வைக்கும் படிக் கூறிச் சென்றான். உன்னால்

—காரை குருமூர்த்தி-



ஏதோ முக்கியமான வேலை ஆக வேண்டுமாம்'' என்றான்.

மாதவனிடம் ஜெயபாலனுக்கு மிகுந்த அன்பும் பாசமும் உண்டு. அதனால் அவன் ''மாமா என்னைத் தன் ஊருக்கு வரச் சொன்னாரா? என்னால் அவருக்கு ஒரு வேலை ஆக வேண்டுமா? நான் செய்து கொடுக்கிறேன். என்னால் முடியாத வேலை என்ன இருக்கிறது? என் சாமார்த்தியத்தைத் தெரிந்து கொண்டுதான் அவர் என்னை அழைத்திருக்கிறார்'' என்று தன் தந்தையிடம் கூறிவிட்டு உடனே கிளம்பித் தன் மாமனது ஊருக்குச் சென்றான். மாதவனும் நலன் விசாரித்த பின் ''நீ பட்டணத்திலுள்ள பெரும் வியாபாரி பொன்னுசாமியை அறிவாயா?'' என்று கேட்டான். ஜெயபாலனும் தெரியாது எனவே மாதவனும் ''இப்போது அவரால் எனக்கு ஒரு சிறு வேலை ஆக வேண்டும். நீயும் என்னுடன் வா. அவரை உனக்கு அறிமுகம் செய்து வைக்கிறேன். பிற்காலத்தில் உனக்கும் அவரது உதவி தேவைப்படலாம்'' எனக் கூறி அவனை அழைத்துக் கொண்டு பட்டணத்திற்குச் சென்றான்.

வழியில் ஜெயபாலன் தன் மாமனிடம் ''அவர் என்ன மிகப் பெரிய மனிதரா? என்னை விடப் பெரிய அறிவாளியா? அவரது அறிமுகம் இல்லாமலே நான் எதையும் என் சாமர்த்தியத்தால் அடைந்து விட முடியுமே'' என்றான். மாதவனும் ''சரி. இப்போதைக்கு அவரால் எனக்கு வேலை யாகவே வேண்டும். அவரை அவ்வளவாக நான் அறிய மாட்டேன். ஏதோ ஓரிரு முறை அவரைச் சந்தித்துப் பேசி இருக்கிறேன். இப்போது என்னை அவர் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறாரோ என்னவோ? எது எப்படி இருந்தாலும் அவரால் என் வேலை ஆக வேண்டும் அதை கவனிப்போம்'' என்றான்.

அவன் ஜெயபாலனைப் பல தெருக்களில் அழைத்துப் போய் முடிவில் ஒரு தெருமுனையில் நின்று ''இந்தத் தெருவில்தான் பொன்னுசாமியின் வீடு இருப்பதாக எனக்கு நினைவு. யாரையாவது கேட்போம்'' எனக்கூறி எதிரே தென்பட்ட காய்கறிக் கூடைக்காரனிடம் ''என்னப்பா! பொன்னுசாமியின் வீடு எங்கே இருக்கிறது என்று தெரியுமா?'' என்று கேட்டான். அவனும் ''அந்த தர்மப்பிரபுவின் வீடு யாருக்குத்தான் தெரியாது? இந்த ஊரில் ஒரு சிறு குழந்தையைக் கேட்டால் கூடச் சொல்லி விடுமே'' என்று சிரித்தவாறே கூறிவிட்டுச் சென்றான்.

அவன் சொன்னதைக் கொண்டு அந்த வியாபாரியின் வீட்டைக் கண்டு பிடிக்க முடியாததால் சற்று தூரத்தில் வந்து கொண்டிருந்த ஒரு பெரிய மனிதரிடம் பொன்னுசாமியின் வீடு எங்குள்ளது என்று கேட்கவே அவர் மிகவும் பணிவுடன் அந்த வியாபாரியின் வீடு உள்ள இடத்தைக் கூறி ''ஆமாம்! நீங்கள் யாரென நான் அறிந்து கொள்ளலாமா?'' என்று கேட்டார். மாதவனும் ''நாங்கள் வெளியூர்க்காரர்கள். அவரைக் கண்டு போகலாம் என வந்திருக்கிறோம்'' என்றான். அது கேட்டு அந்தப் பெரிய மனிதரும் அடக்க ஒடுக்கமாக ''அவரைக் கண்டதும் உங்களது கஷ்டங்களெல்லாம் போய்விடும். அவர் போல தயாள குணம் படைத்தவர் யாருமே இல்லை. அவர் செய்த உதவியால்தான் படுத்துப் போன என் வியாபாரம் நிமிர்ந்து தழைத்தது அவர் சொல்லாலும் செயலாலும் செய்த உதவிக்கு நான் அவருக்கு என்றென்றும் கடன்பட்டவன்'' என்றார்.

மாதவன் ஓஹோ! பொன்னுசாமி அவ்வளவு உயர்ந்தவரா? அவரைப் பற்றி உங்களைப் போன்றவர்கள் கூறும்போது மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது'' என்று கூறி அவரை வணங்கி அனுப்பிவிட்டு அவர்கூறிய அடையாளம் கொண்டு பொன்னுசாமியின் வீட்டைக் கண்டுபிடித்து ஜெயபாலனுடன் அந்த வீட்டிற்குள் நுழைந்தான். அப்போது பொன்னுசாமி மூன்று வியாபாரிகளுடன் ஏதோ பேசிக்கொண்டிருந்தார். மாதவனைக் கண்டதும் அவர் எழுந்து வந்து ''வாருங்கள் உங்களைப் பார்த்து வெகுநாட்களாயிற்றே'' என்று பரிவுடன் கூறி வரவேற்றார்.



அதைக் கண்டு ஜெயபாலன் திடுக்கிட்டான். மாதவனும் சிரித்துக் கொண்டே ''ஏதோ வேலையாக இருந்து விட்டேன். அதனால்தான் இந்தப் பக்கம் வர முடியவில்லை'' என்றான். அப்போது. அங்கிருந்தவர்களில் ஒருவர் மாதவனிடம் ''கூட வந்திருப்பது யார்?'' என்று கேட்டார். மாதவனும் ''இவன் என் அத்தான் பூபாலனின் மகன். பெயர் ஜெயபாலன்'' என்றான். அவரும் ''ஓ! ஜெயபாலனா? இவன் என் மகனோடு குருகுலத்தில் படித்தவன். அப்போதிருந்தே இவனைப் பற்றி எனக்கு நன்கு தெரியும். இவன் எப்போதும் தற்பெருமை அடித்துக் கொள்பவனாயிற்றே. தன்னை மிஞ்சியவர் யாருமில்லை என்றுதானே இவன் நினைக்கிறான்? ஏன் இவன் நம் பொன்னுசாமியை விடக்கூட மிகப்பெரியவன்

என்று கூடச் சொல்லிக் கொண்டாலும் கொள்வானே!'' என்று கேலியாகவும் குத்தலாகவும் கூறினார்.

அவர் கூறியது ஜெயபாலனின் மனதில் அம்பு போல் தைத்தது. பொன்னுசாமி அவனையும் மாதவனையும் தன்னோடு சாப்பிட அழைத்துச் சென்றார். அதன்பின் சற்று இளைப்பாறி விட்டு மாதவன் பொன்னுசாமியிடம் விடை பெற்றுக் கொண்டு ஜெயபாலனுடன் கிளம்பினான். வழியில் ஜெயபாலன் எதுவும் பேசாமல் இருக்கவே மாதவனும் ''என்ன யோசிக்கிறாய்? வந்த வேலை நடக்கவில்லை என்றா நினைக்கிறாய்'' என்று கேட்டான்.

ஜெயபாலனும் தலைகுனிந்தவாறே ''மாமா! நீங்கள் உங்கள் வேலையைத்தான் வெற்றிகரமாக முடித்து விட்டீர்களே'' என்றான். அது கேட்டு மாதவன் ஆச்சரியப்பட்டவர் போல ''என் வேலை முடிந்து விட்டதா?'' என்று கேட்டான். ஜெயபாலனும் ''மாமா! நீங்கள் என்னைத் திருத்தத்தானே பட்டணத்திற்கு அழைத்துச் சென்றீர்கள்? பொன்னுசாமி உங்கள் நண்பர். அவரது வீடு எங்குள்ளது என்பது உங்களுக்குத் தெரிந்திருந்தும் தெரியாது போல நடித்தீர்கள். வழியில் இருவரிடம் விசாரிப்பது போல நடித்து பொன்னுசாமியின் அருமை பெருமைகளை அவர்கள் வாயிலாகத் தெரிய வைத்தீர்கள். பொன்னுசாமி தம்மைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பெருமையாகக் கூறிக் கொள்ளவில்லை. ஆனால் அங்கிருந்த ஒருவர் குத்தலாகக் கூறியது என் மனதை வாட்டி என்னைத் திருத்தி விட்டது. இதற்கு நான் உங்களுக்கு என் நன்றியைச் செலுத்துகிறேன்'' என்றான்.

மாதவனும் ''பேஷ். நீ சட்டெனப் புரிந்து கொண்டாயே. இனிமேல் தற்பெருமை அடித்துக் கொள்ளமாட்டாய். நாமே நம்மைப் புகழ்ந்து கொள்ளக் கூடாது. பிறர் நம்மைப் புகழ்வதால் தான் பெரிய மனிதராக முடியும்'' என்றான். அது முதல் ஜெயபாலன் தற்பெருமை அடித்துக் கொள்ளாமல் அடக்கமாக நற்செயல்களைப் புரிந்து வரலானன் திருந்திய ஜெயபாலனை மகிழ்ச்சியுடன் மாதவன் தன் மாப்பிள்ளையாக ஆக்கிக் கொண்டான்.



## அம்புலிமாமா

# பொன்மயமான பொழுதுகள்

## மரணப் பள்ளம்

கோரிமலைவாசிகள் இளவரசன் உதயணனை சிறைப்பிடித்தனர்

ஓ! பார்க்க முடிய வில்லையே

என் மந்திரம் உன்னைக் குருடாக்கியது மாலைக்குள் நீ இறப்பாய்

மறுபக்கமுள்ள மந்திர நீரோடைதான் உன்னைக் காப்பாற்றும். போ.

இளவரசன் துணிவுடன் மரணப் பள்ளத்துள் சென்றான்.

அவன் தன் ஆசிரியர் கூறிய ரகசிய வழியை நினைவுபடுத்திக் கொண்டான்.

பார்த்தே செய்யவே வேண்டியது..

அது என்ன ரகசிய வழி?



# அம்புலிமாமா நேரம்

# கேள்விக் கணைகள்

1. கம்போடியாவில் பிரஞ்சு இயற்கை ஆய்வாளரான ஹென்றி மோஹோட் சென்ற நூற்றாண்டில் கம்போடியாவில் வண்ணத்துப் பூச்சிகளைப் பின் தொடர்ந்து சென்றபோது ஒரு சாம்ராஜ்யத்தின் தலைநகரின் இடிபட்ட பகுதிகளைக் கண்டார். அந்த நகரின் பெயர் என்ன? அங்கு கண்டெடுக்கப்பட்ட சிலையின் பெயர் என்ன?

2.



போர்த்துகிசியர் முதன் முதலில் இப்பறவையைப் பார்த்ததும் இதற்கு வேடிக்கையாக டூடு என்று பெயரிட்டனர். இதன் பொருள் பைத்தியம் என்பதாம். இப்பறவையை உலகில் எங்கு காணலாம்?

3.

இத்தொடரில் அடுத்து வருவது என்ன?

**M 8 δ V**

4.

மகாராஷ்டிர கிராமப் பகுதியில் இது புகழ் பெற்ற நடனம். இதன் பெயர் என்ன?



5.

அந்தமான் மலைவாசிகள் எதன்மீது அம்பு எய்கிறார்கள்?



6.

படகிலிருந்து தொங்கும் உருவம் நீர்மட்டத்தைத் தொடுகிறது. நீர்மட்டம் 10 நிமிடங்களுக்கு ஒருமுறை 10 செ.மீ. உயர்கிறது. உருவம் 1 மீட்டர் உயரம். ஒரு மணி நேரத்தில் அந்த உருவத்தின் எவ்வளவு பகுதி நீரில் மூழ்கி இருக்கும்?



## பாண்டாவைக் கத்தரித்து எடுங்கள்

இப்படத்தைப் பெரிதாக்கி ஒரு தடிமனான காகிதத்தில் புள்ளிக் கோடு களுடன்! ட்ரேஸ் செய்து கொள்ளவும்

உலக இயற்கை வளநிதியின் சின்னம் பெரிய பாண்டா



படத்தைக் கத்தரித்து கோடுகளில் மடித்து இங்கு காட்டியது போல உட்காரும் பாண்டா செய்யவும்

**மூன்றே முறைகளில் ஒரு நாய்க் குட்டியை வரையலாம்!**









# மகாபாரதம்

தருமர் அந்த சூதாட்டத்தில் துரௌபதியையும் இழந்தார். இனிப் பந்தயமாக வைக்க அவரிடம் எதுவும் இல்லை. துரியோதனனோ ''அந்த துரௌபதியை இங்கு வரச் சொல். அவள் இந்த சபா மண்டபத்தைப் பெருக்கி மெழுக வேண்டும்'' என்று கூறினான். அப்போது விதுரர் கோபத்தோடு ''துரியோதனா! உன் அறிவு மழுங்கி விட்டதா? ஏன் இப்படி முட்டாள்த்தனமாகப் பேசுகிறாய்? பாண்டவர்களின் கோபத்தை வீணாகக் கிளராதே. உன் செய்கையால் கௌரவ வம்சத்திற்கே அழிவுதான் ஏற்படும். துரௌபதி எப்படி உனக்கு வேலைக்காரி ஆவாள்? தருமன் தன்னை பந்தயமாக வைத்துத் தோற்ற பின்தானே துரௌபதியைப் பந்தயமாக வைத்தான்? அவ்வாறு பந்தயம் வைக்க அவனுக்கு உரிமை இல்லை'' என்றார்.

துரியோதனனோ அவர் கூறியதைச் சற்றும் லட்சியம் செய்யவில்லை. அவன் பிரதிகாமி என்பவனிடம் ''நீ அந்தப்புரத்திற்குப் போய் துரௌபதியை இங்கு அழைத்து வா. இந்தப் பாண்டவர்களைப் பார்த்து பயப்படாதே'' என்றான். அவனும் துரியோதனனின் கட்டளைப்படி பாண்டவர்களின்விடுதிக்குப்போய் ''துரௌபதி! உன்கணவர் சூதாட்டத்தில் உன்னைப் பந்தயமாக வைத்துத் தோற்று விட்டார். அதனால் இனி நீ துரியோதனனின் வேலைக்காரி. நீ திருதராஷ்டிரனின் வீட்டிற்கு வர வேண்டும் என்று அவர் கட்டளை இட்டிருக்கிறார்'' என்றான்.

அதுகேட்டு துரௌபதி ''எந்த க்ஷத்திரியனும் சூதாட்டத்தில் தன் மனைவியைப் பந்தயமாக வைக்க மாட்டான். தருமரின் அறிவு தடுமாறி விட்டதா? அங்கு என்ன நடந்தது என்று சொல்''

—துரௌபதியின் துகிலுரிதல்—



போது அங்கு வரும் நிலையில் இல்லை வருவதும் தவறு. என் கேள்வி இதுதான் தன்னை முதலில் பந்தயத்தில் தோற்றபின் என்னை என் கணவர் பந்தயமாக வைக்க உரிமை பெற்றவரா? சபையோர் எனது இக் கேள்விக்குப் பதில் சொன்னபின் நான் அங்கு வருவது பற்றிக் கூறுகிறேன்'' என்றாள். பிரதிகாமி மீண்டும் சபைக் குப் போய் துரௌபதி கேட்ட கேள்வி யைத் தெரிவித்தான். சபையோர் துரியோதனனுக்கு பயந்து எதுவும் கூற வில்லை. இது கண்டு தருமர் துரௌப தியை அழைத்து வர பிரதிகாமியுடன் ஒரு தூதனை அனுப்பினார்.

துரௌபதி அப்போது வீட்டிற்கு விலக்காக இருந்தாள். அந்நிலையி லும் தருமர் அனுப்பிய தூதனுடன் சபைக்குச் சென்று திருதராஷ்டிரனின் முன் சற்று தூரம் தள்ளியே நின்றாள். பாண்டவர்கள் எதுவும் பேசாமல் தலை குனிந்து கொண்டிருந்தார்கள். அந்த நிலையில் துரியோதனன் பிரதி காமியிடம் ''என்ன பார்க்கிறாய்? அவளை இங்கே கொண்டு வந்து நிறுத்து'' என்று அதிகாரத்தோடு கூறினான்.

பிரதிகாமி பயந்து என்ன செய்வது எனத் தெரியாமல் சபையோரைப் பார்த்தான். அவன் பீமனைக் கண்டு தான் பயப்படுகிறான் என்று ஊகித்து விட்ட துரியோதனன் ''துச்சாதனா! நீ போய் துரௌபதியை இங்கே இழுத்து வா. நமக்கு அடிமைகளாகி விட்ட இந்தப் பாண்டவர்களால் எதுவும் செய்ய முடியாது'' என்றான். துச்சாதன னும் சற்றும் கூச்சப்படாமல் ''துரௌ பதி! இங்கே வா. உன் கணவன்

எனக் கேட்டாள். அவனும் ''தருமர் தம் நாடு, பொருள் முதலியவற்றை இழந்த பின் தன் தம்பிகளையும் பந்தயம் வைத்துத் தோற்றார். பின் தன்னையே பந்தயமாக வைத்துத் தோற்றார். அதன்பின் அவர் உன்னை யும் பந்தயமாக வைத்துத் தோற்றார்'' என்றான்.

துரௌபதியும் ''அப்படியானால் நான் அங்கு வரவேண்டியதில்லை என்று சொல்'' எனக் கூறி பிரதிகாமி யைப் போகச் சொன்னாள். அவனும் துரியோதனனிடம் துரௌபதி சொன்னதைக் கூறவே துரியோதன னும் ''அவளை முதலில் இங்கு வரச் சொல். பிறகு அவளுக்கு என்னவெல் லாம் கேட்க வேண்டுமோ, கேட்கட் டும்'' என்றான். பிரதிகாமியும் மறு படியும் போய் துரியோதனன் கூறி யதை துரௌபதியிடம் சொன்னான்.

அப்போது துரௌபதி ''நான் இப்

உன்னைப் பந்தயமாக வைத்துத் தோற்று விட்டான். இனி நீ எங்களுக்குச் சொந்தம். துரியோதனனுக்கும் மற்ற கௌரவர்களுக்கும் உடைமையாகி விட்டாய்'' எனக் கூறியவாறே துரௌபதியை அணுகினான். துரௌபதி பயந்து நடுங்கித் தன் முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு காந்தாரியைப் பார்த்தாள்.

இதற்குள் துச்சாதனன் அவளது தலை மயிரைப் பற்றி அவளை இழுத்து ''வா இங்கே'' என உறுமினான். வீரர்களான ஐவர் தன் கணவன்களாக இருந்தும் அவர்கள் ஒன்றும் செய்ய முடியாமல் இருக்கும் நிலையைக் கண்டு அவள் பயந்து ''அடே மதி கெட்டவனே. நான் இப்போது வீட்டிற்கு விலக்காக இருக்கிறேன். என்னைத் தொடுகிறாயே'' என்றாள். துச்சாதனனோ ''நீ எப்படி இருந்தால் எனக்கென்ன? உன் கணவன் சூதாட்டத்தில் தோற்ற உன்னை எங்களுக்குக் கொடுத்து விட்டான். இனி நீ எங்கள் வேலைக்காரிதான்'' எனக் கூறி தரதர வென்று இழுத்து வந்தான்.

துரௌபதியின் கூந்தல் அவிழ்ந்து விட்டது. கட்டி இருந்த புடவை சற்றுக் கலைந்தது. அவள் கோபத்தோடு ''அடே! உன் தந்தைக்குச் சமமான பெரியவர்கள் இருக்கும் இந்த சபையில் இந்த அடாத செயலை எப்படியடா புரிகிறாய்? இந்த சபையில் தர்மம் நியாயம் என்பதெல்லாம் முடங்கி விட்டதா? பீஷ்மர், துரோணர், விதுரர் போன்றவர்கள் இருந்தும் இந்த அக்கிரமத்தை ஏன் தடுக்கவில்லை?'' என்று கூறியவாறே பாண்டவர்களைப் பார்த்தாள்.

அப்போது துச்சாதனன் ''ஏய் வேலைக்காரி! பேசாதே'' என மிரட்டினான். கர்ணன் கை கொட்டிச் சிரித்தான். சகுனியும் துரியோதனனும் உரக்கச் சிரித்தார்கள். சபையிலிருந்தோர் மனதிற்குள் புழுங்கிக் கொண்டிருந்





அதைக் கேட்ட அர்ஜுனன் பீமனிடம் ''இதுவரை பொறுமையாக இருந்த நீங்கள் ஏன் திடீரென எரிமலை வெடிப்பது போல கோபமாய் வார்த்தைகளைக் கொட்டுகிறீர்கள்? அண்ணா தருமர் தாமாக சூதாட்டம் ஆடவில்லை. அவர் அழைக்கப் பட்டதாலே பண்பாட்டிற்கிணங்க அதில் கலந்து கொண்டார். அதனால் தவறு அவருடையது அல்ல'' என்றான்.

துரௌபதி கேட்ட கேள்விக்கு அச்சபையில் இருந்த யாருமே பதில் சொல்லாததைக் கண்டு திருதராஷ்டிரனின் மைந்தர்களில் ஒருவனான விகர்ணன் எழுந்து ''இச்சபையிடம் துரௌபதி கேட்ட கேள்விக்கு யாராவது பதில் சொல்லுங்கள். பெரியவர்களும் ஆச்சார்யர்களும் ஏன் பேசாமல் இருக்கிறார்கள்? பாரபட்சம் பாராட்டாமல் நடுநிலை தவறாமல் நீதியை எடுத்துக் கூறுங்கள்'' என்றான். அப்போதும் யாரும் எதுவும் கூறவில்லை.

அப்போது விகர்ணன் ''நீங்கள் யாருமே பதில் சொல்ல மாட்டீர்களா? அப்படியானால் நான் சொல்கிறேன். பெண், வேட்டை, சூதாட்டம், குடி ஆகிய இந்த நான்கில் ஏதாவது ஒன்றிற்கு ஒரு அரசன் அடிமையாகி விட்டால். அவனால் தர்ம நீதியுடன் இருக்க முடியாது. தருமர் சூதாட்டத்திற்கு அடிமையாகித் தன் நாடு, செல்வம், தன் சகோதரர்கள் என்று வரிசையாக இழந்து தன்னையும் பந்தயமாக வைத்து அதில் தோற்றார். இதற்குப் பிறகே அவர் துரௌபதியைப் பந்தயமாக வைத்தார். துரௌபதி தருமரின் மனைவி மட்டுமல்ல. அவரது மற்ற

தனர். அப்போது பீமன் துரௌபதியிடம் ''இப்போது தர்மம் நீதி என்று பேசுவதில் பயன் இல்லை. ஐவருக்கு மனைவியான உன்னை தருமர் பந்தயமாக வைத்ததே தவறு. ஆனால் அவர் உனக்கு தீங்கு ஏற்படாமலிருக்க தர்ம நியாயமாக நடப்பார்'' என்றான்.

துரௌபதியும் ''அவர் இஷ்டப் படாமல் இந்த சூதாட்டம் ஆட வேண்டியதாயிற்று. எல்லாவற்றையும் தம்மையும் இழந்தபிறகுதானே என்னைப் பந்தயமாக வைத்தார்? இது எப்படி நியாயம் என்று இந்த சபையிலுள்ள மூத்தவர்கள் சொல்வார்களா?'' என்று கேட்டாள். பீமனும் தருமரைப் பார்த்து ''நீங்கள் கற்புக் கரசியான துரௌபதியைச் சூதாட்டத்தில் பந்தயமாக வைத்தது பெருந்தவறு. இதற்காக உங்களுக்கு என்ன கடுந் தண்டனை கொடுத்தாலும் தகும்'' என்று சற்றுக் கோபத்தோடு கூறினான்.

நான்கு சகோதரர்களின் மனைவியும் ஆவாள். எனவே அவளை வேலைக் காரி எனக்கூறி இச்சபைக்கு அழைத்து வந்தது முற்றிலும் தவறு'' என்றான்.

அப்போது கர்ணன் குறுக்கிட்டு விகர்ணா! இச்சபையில் எவ்வளவோ பெரியவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தெரியாத நியாயம் சுண்டைக்காய்ப் பயலான உனக்குத் தெரிந்து விட்டதா? தருமர் தன் உடைமைகளை எல்லாம் இழந்த போதே துரௌபதியையும் இழந்து விட்டார். அதனால்தான் பாண்டவர்கள் வாய் திறவாமல் இருக்கிறார்கள். இந்த துரௌபதியை இந்த சபைக்கு வரவழைத்தது முறையற்ற செயல் என்று கூறுகிறாய். ஐந்து பேர்களைக் கணவனாகக் கொண்டவள் கற்புக்கரசி அல்ல அப்படிப்பட்டவளின் புடவையை இந்த சபையில் அவிழ்த்து நிறுத்தினாலும் எவ்விதத் தவறும் இல்லை. துச்சாதனா! விகர்ணன் ஆட்சேபிக்கிறான் என்பதற்காகத் தயங்கி நிற்காதே. நீ இந்தப் பாண்டவர்களின் ஆடைகளையும் துரௌபதியின் வஸ்திரங்களையும் களைந்து எடுத்து வா'' என்று கூறினான்.

கர்ணன் இவ்வாறு கூறியதும் பாண்டவர்கள்தாம் போர்த்தி இருந்த அங்க வஸ்திரங்களை எடுத்துத் தனியே வைத்தார்கள். துச்சாதனன் துரௌபதியின் புடவையை இழுக்கலானான். அப்போது தன்னைக் காக்குமாறு துரௌபதி கிருஷ்ணனரைப் பிரார்த்தித்தாள். கிருஷ்ணரும் யார் கண்களுக்கும் புலப்படாமல் நின்று பல புடவைகளைக் கொடுத்து துரௌபதியின் புடவையின் நீளத்தை அதிகரித்துக் கொண்டே இருந்தார்.

துச்சாதனன் துரௌபதியின் புடவையைப் பற்றி இழுக்க அது தொடர்ந்து வந்து கொண்டே இருப்பது கண்டு திகைத்துப் போனான். அவன் இழுத்துப் போட்ட புடவைப்





பகுதி பெரும் மலை போலக் குவிந்தது. முடிவில் அவன் கைகள் வலிக்க களைப்படைந்து கீழே விழுந்து விட்டான்! பீமனோ கோபத்தோடு பற்களை 'நற நற'வென்று கடித்தவாறே ''துரௌபதியின் புடவையைக் களைந்து அவமானப்படுத்த முயன்ற இந்தக் கயவன் துச்சாதனனின் மார்பைப் போரின் போது பிளந்து அவனது ரத்தத்தைக் குடிப்பேன். இது சத்தியம்'' என்று உரக்கக் கூறினான்.

நிலைமை விபரீதமாவது கண்டு விதுரன் எழுந்து ''சபையோர்களே! துரௌபதியின் கேள்விக்குப் பதிலளிக்காது இருப்பது அநியாயத்திற்குக் துணைபோவதாம். நீங்கள் அனைவரும் எதுவும் சொல்லாமல் இருக்கையில் துணிவுடன் விகர்ணன் தன் அபிப்பிராயத்தை நீங்கள் கேட்கக்கூறினான். நிர்கதியாய் நிற்பவர்களின் சார்பாக நியாயம் எடுத்துக்கூறாவிட்டால் நாம் நம் கடைமையைச் செய்யத் தவறியவர்களாகி விடுவோம்'' என்றான். அப்போதும் யாரும் எதுவும் கூறவில்லை. துரியோதனனோ தன் தொடையைத் தட்டி அதன் மீது உட்காருமாறு துரௌபதிக்குச் சைகை செய்தான்.

அது கண்டு பீமன் கடுங் கோபம் கொண்டு ''அடே துரியோதனா! போரில் உன் தொடையைப் பிளந்து உன்னைக் கொல்கிறேன். இது சத்தியம்'' என்று கர்ஜித்தான். துரியோதனனோ துரௌபதியிடம் ''இதில் என் தவறு எதுவும் இல்லை. இந்த பீமனும், அர்ஜுனனும், நகுலனும், சகாதேவனும் தாம் தருமரின் சொல்லுக்குக்கட்டுப்பட வேண்டியதில்லை என்று சொல்லிவிட்டால் போதும் உன்னை விட்டு விடுகிறேன்'' என்றான். அர்ஜுனனும் ''அவர் சொல்லுக்கு மறுசொல் நாங்கள் கூற மாட்டோம்'' என்றான்.

இச்சமயத்தில் பல அபசகுனங்கள் தோன்றின. அவற்றால் பயந்து போன திருதராஷ்டிரன் ''துரியோதனா! மடத்தனமாக ஏன் துரௌபதியை இந்த சபைக்கு வரச் சொன்னாய்? பாண்டவர்களிடம் ஏன் வீண் பகை கொள்கிறாய்?'' என்று அதட்டினான். பிறகு அவன் துரௌபதியிடம் ''நீதான் என் மருமகள்களில் மிகச் சிறந்தவள். உனக்கு என்ன வேண்டுமோ கேள். நான் கொடுக்கிறேன்'' என்று கனிவுடன் கூறினான்.

துரௌபதியும் ''என் கணவர்களை அடிமைத் தனத்திலிருந்து விடுதலை செய்யுங்கள்'' என்று கேட்டுக்கொண்டாள். அப்போது கர்ணன் ''ஓஹோ! பாண்டவர்களை விடுவிக்க ஒரு

பெண் வரவேண்டி இருக்கிறது'' என்று கேலியாக கூவினான். பீமனோ ''அடே அற்பனே! உன்னை இப்போதே கொல்கிறேன் பார்'' என்று கூறித் துள்ளி எழுந்தான். தருமரும் அர்ஜுனனும் அவனை அடக்கி சமாதானப் படுத்தினார்கள்.

அதன்பின் தருமர் திருதராஷ்டிரனிடம் ''அரசே! எங்களுக்குத் தங்கள் கட்டளை என்ன?'' என்று கேட்டார். திருதராஷ்டிரனும் ''தருமா! நீயும் உன் தம்பிகளும் இந்திரப் பிரஸ்தத்திற்குப் போய் நன்கு ஆட்சி புரிந்து சுகமாக வாழ்ந்து வாருங்கள். சதுரங்கம் ஆட நட்புறவு இருக்க வேண்டும் எனக் கூறியே நான் அதற்கு அனுமதி அளித்தேன் ஆனால் நிலைமை மாறிய போது அந்த ஆட்டத்தைத் தடுத்து நிறுத்தாதது என் தவறே. நானும் காந்தாரியும் என் மகன்கள் செய்த அட்டூழியங்களை தட்டிக் கேட்காமல் இருந்து விட்டோம். வயதான எங்களை இதற்காக மன்னித்து நடந்ததை எல்லாம் மறந்து விடு. உங்களுக்கு நன்மையே உண்டாகட்டும்'' என்று ஆசிகள் கூறினான்.

சபையோர் நடந்ததை எல்லாம் கண்டு எதுவும் பேச முடியாமல் கற்சிலைகளைப் போல அதுவரை இருந்தார்கள். பாண்டவர்கள் வஞ்சகமாகச் சூதாட்டத்தில் தோற்கடிக்கப்பட்டு அவர்களது உடமைகலை எல்லாம் துரியோதனன் பறித்துக் கொண்டது கண்டு மனம் புழுங்கினார்கள்.

துரௌபதி சபைக்கு அழைத்து வரப்பட்டு மானபங்கம் செய்யப்படும் நிலை கண்டு பலர் பதறிப் போனார்கள். திடீரென அவளது புடவை நீண்டு கொண்டே போய் துச்சாதனனைக் களைப்படையச்செய்தது கடவுள் செயலே என நினைத்து ஆறுதல் அடைந்தார்கள். இவ்வளவு தொல்லைகளை துரியோதனனும் அவனது சகாக்களும் பாண்டவர்களுக்குக் கொடுத்தும், தருமர் சற்றும் ஆத்திரப்படாமல் தம் தம்பிகளையும் அடக்கிப் பொறுமையுடன் செயல்பட்டதை மிகவும் பாராட்டினார்கள். முடிவும் பாண்ட வர்களுக்கு நன்மை பயத்தது கண்டும் மகிழ்ந்தார்கள். பாண்டவர்களும் எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு துரௌபதியுடன் இந்திரப் பிரஸ்தத்திற்குப் புறப்பட்டார்கள்.



**அம்புலிமாமா அனுபந்தம் - 92**

**நம் நாட்டு மரங்கள்**

# விளா மரம்

விளாம் பழத்தை யானை மிகவும் விரும்பி புசிக்கும். விளாம் பழத்தை ஓட்டோடு விழுங்கி, உள்ளிருக்கும் சதைப் பற்றை ஜீரணித்து வெற்று ஓட்டை வெளியே கழித்து விடுகிறது. விநாயக சதுர்த்தியன்று விளாம் பழத்தை விநாயகருக்கு படைக்கிறார்கள். இதன் மேல் ஓடு கடினமாயும் உள்ளே உள்ள சதைப்பற்று மிருதுவாயும் இனிப்பாயும் இருக்கும். இது உடலுக்குக் குளிர்ச்சியைத் தருகிறது. அதனால் கோடை காலத்தில் இதனை சர்பத்தாகச் செய்து குடிக்கிறார்கள். இந்த சர்பத்தில் சர்க்கரைக்கு பதிலாக வெல்லத்தைச் சேர்க்கிறார்கள். விளாம் பழச்சதைப் பற்றுடன் தேன், கல்கண்டு முதலிய வற்றையும் சேர்த்து ருசியான தின்பண்டம் தயாரிக்கிறார்கள்.

விளா மரம் அடர்ந்த காடுகளில் நிறைய வளர்கின்றன. சில இடங்களில் வீடுகளில் கூட வளர்க்கிறார்கள். தடிமனான கிளைகளுடன் சாதாரண உயரத்தில்தான் இந்த மரம் வளர்கிறது. இதன் இலைகள் ஒன்றுக்கு மற்றது எதிரும் புதிருமாக இருக்கும். இளம் சிவப்பு நிறத்தில் இதன் பூக்கள் இருக்கும் காய்கள் இளம் ஊதாநிறத்தில் கெட்டியான ஓட்டுடன் பந்து போல் இருக்கும். இதன் குறுக்களவு இரண்டு அல்லது மூன்று அங்குலம் இருக்கும்.



*நம் நாட்டு முனிவர்கள் - 11*

# கஸ்யபர் - ஆஸ்திகர்

ஒருமுறை உலகில் எங்கும் பயபீதி பரவியது. அப்போது ஆறு, ஏரி, குளங்களில் எல்லாம் பாம்புகள் அதிகமாக இருந்தன. காடுகளிலும் பாம்புகள். இதனால் மானிடர்கள் நடுநடுங்கினார்கள்.

அப்போது கஸ்யபர் என்ற முனிவர் தம் தவத்தின் சக்தியால் மந்திரங்களை உருவாக்கிப் பாம்புகளின் உபத்திரவத்தைக் குறைத்தார். பாம்பின் விஷத்தைப் போக்க மருந்தைக் கண்டு பிடித்தார். பாம்புகளை அடக்கும் மானசா தேவியையும் தம் மந்திர பலத்தால் சிருஷ்டித்தார்.

மானசா தேவி ஜரத்காரர் என்ற ரிஷியை மணந்தாள். அவர்களுக்கு ஆஸ்திகர் என்ற ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தை வளர்ந்து பெரியவனாகி சிறந்த விஷ்ணு பக்தனாக ஆகியது.

பரீட்சித்து மன்னன் ஒருமுறை வேட்டையாடப் போய் தவம் செய்து கொண்டிருந்த சமீகரர் என்ற முனிவரின் கழுத்தில் வேடிக்கையாக ஒரு செத்த பாம்பை எடுத்து மாலையாகப் போட்டான். அதனால் கோபம் கொண்ட அந்த முனிவரின் மகன் ஏழு நாட்களில் பரீட்சித்து பாம்பு கடித்துச் சாக வேண்டும் என்று சபித்தான். இதைக் கேட்ட மன்னன் பரீட்சித்து பாம்பு தன்னை அணுகாதவிதமாய் ஏற்பாடுகளைச் செய்து கொண்டான். ஆனால் ஏழாவது நாளில் அவன் சாப்பிட எடுத்த பழத்தில் புழு உருவில் இருந்த ஒரு பாம்பு வெளியே வந்து பெரிதாகித் தீண்டியது. பரீட்சித்து முனிவரது மகனின் சாபப்படி இறந்தான். அந்தப் பாம்பு தட்சகன் என்ற பாம்புகளின் மன்னன்.

தட்சகனின் செயலால் கோபம் கொண்ட பரீட்சித்து மன்னனின் மகன் ஜெனமே ஜெயன் உலகிலுள்ள பாம்புகளை அழிக்க சாப்ப யாகத்தைச் செய்தான். மந்திரங்களின் சக்தியால் எங்கெங்கிருந்தோ பாம்புகள் வந்து அந்த யாகத் தீயில் விழுந்து எரிந்து போயின. இதைக் கண்டு தட்சகன் பயந்து தேவேந்திரனின் சிம்மாசனத்தின் கீழ் ஒளிந்து கொண்டான். மந்திர சக்தி தட்சகனையும் தேவேந்திரனையும் சிம்மாசனத்தோடு தூக்கிச் சென்றது. அப்போது ஆஸ்திகர் ஜெனமே ஜெய மன்னனைக் கண்டு அவனை சமாதானப்படுத்தி சர்ப்ப யாகத்தை நிறுத்தினார். தட்சகனும் வேறு சில பாம்புகளும் உயிர் தப்பி ஓடி விட்டன.

பாம்புகளை ஆஸ்திகர் காப்பாற்றியதால் அவர் பெயரை ஜெபித்தால் பாம்புகளின் பயம் இல்லை எனக் கூறுகிறார்கள்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. 'பேய்த் தீவு' எங்கே உள்ளது?
2. இந்திய ரயில் பாதையின் மொத்த நீளம் எவ்வளவு?
3. கேரள மாநிலப் பேரவையில் மொத்த இடங்கள் எவ்வளவு?
4. நம் நாட்டில் ஆங்கிலத்தை ஆட்சி மொழியாக ஏற்றுள்ள மாநிலம் எது?
5. புகழ்பெற்ற உயிரியல் நிபுணர் சலீம் அலி தன் சுயசரிதத்தில் தன் வாழ்க்கையில் தொடர்பு கொண்ட பறவையைக் குறிப்பிட்டிருக்கிறார். அது எது?
6. கணிதத்தில் லாகிருதத்தை உருவாக்கியவர் யார்?
7. நம் நாட்டில் அனிமேஷன் சினிமா எடுக்கத் தனிப் படப்பிடிப்பு நிலயத்தை நிறுவியவர் யார்? அது எங்கே உள்ளது? அதன்முதல் படம் எது?
8. ஐ.நாவின் பொன்விழாவின் போது நம் நாட்டிலிருந்து மலையாளத்தில் அங்கு பேச அழைக்கப்பட்டவர் யார்?
9. ஐ.நா.வில் கடைசியாகச் சேர்ந்த நாடு எது?
10. நம் நாட்டுப் பெண்மணி ஐ.நா.வில் இசைக் கச்சேரி செய்தார். அவர் யார்?
11. ஐ.நாவின் ஆட்சி மொழிகள் எவை?
12. முதன் முதலில் இந்தியப் போக்குவரத்து அமைப்பில் இணைக்கப்பட்ட இரு நகரங்கள் யாவை?
13. உலக வணிக நிறுவனத்தின் டைரக்டர் ஜெனரல் யார்?
14. உலகக் கப் கிரிக்கெட் போட்டி ஒன்றில் மிகக் குறைந்த ஓட்டங்கள் பாகிஸ்தான் எடுத்தது. எவ்வளவு ஓட்டங்கள்? எந்த நாட்டுடன் விளையாடியது?
15. அடுத்த உலகக் கப் போட்டிகள் எங்கு நடக்கும்?

## விடைகள்

1. தென் அமெரிக்காவில் தென் கிழக்கேயுள்ள பிரெஞ்சு கயானா அருகே உள்ள தீவு.
2. 62,000 கி.மீ.
3. 140
4. நாகாலாந்து
5. குருவி
6. ஜான் சேவியர்
7. தாதாசாகிப் பால்கே அவார்ட் பெற்ற ஏ. நாகேஸ்வரராவ் ஹைதராபாதில் - ஹார்ட் என்டர்டெயின்மெண்ட்.
8. மாதா அமிருதானந்தமயி.
9. சாலாங் ரிபப்ளிக்
10. எம்.எஸ். சுப்புலக்ஷ்மி
11. அரபி, சீனம், ஆங்கிலம், பிரெஞ்சு, ரஷ்யன், ஸ்பானிஷ் மொழிகள்.
12. டில்லி - ஆக்ரா
13. ரின்போ ருகிரோ.
14. 40.2 ஓவர்களில் 74 ஓட்டங்கள். 1992 ல் இங்கிலாந்துடன் விளையாடிய போது.
15. இங்கிலாந்து.

# அம்புலிமாமா எண் 1.கேள்விக்கணைகளின் விடைகள்

1. ஸ்க்வாட்ரன் லீடர் ராகேஷ் சர்மா. அவர் சோவியத் விண்வெளிக் கலத்தின் வாயிலாக இரு ரஷ்ய விண் வெளி வீரர்களுடன் 1984 ஏப்ரல் 5ல் அனுப்பப்பட்ட முதலாவது இந்திய விண் வெளி வீரர்.

2. ஜெயபூரில் சவாய் ராஜா ஜெய் சிங் கட்டிய சூரிய கடியாரத்தின் பெயர் பிரஹத் சம்ராட் யந்தர.

3. சிரெஸ் என்ற உபகிரகத்தை செவ்வாய் வியாழன் கிரகங்களுக்கு கிடையே காணலாம். இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட அஸ்டெராய்ட்களில் இதுவே பெரிது! இதனை 1801 ஜனவரி 1ல் கண்டார்கள்.



4. ஜெகன்நாதபுரி ஆலயத்தில். இவை ஆண்டு தோறும் பெரிய மரத் தேர்களில் வைக்கப்பட்டு ஆயிரக் கணக்கான மக்களால் கோகுலததிலிருந்து மதுரா யாத்திரை எனக் கருதி இழுக்கப்படுகின்றன.

5. பிப்ரவரி 25ல். ஒரு நாளுக்கு 1 மீ வீதம் 27 நாட்களில் 27 மீ ஏறி 28வது நாளில் உச்சியை அடைகிறது.

**சந்திர மண்டல மர்மம்:**
விண் வெளிவீரர் அவருக்கு பின்னிருந்து ராட்சஸ மிருகத்தின் குரலைக் கேட்க முடியாது. ஏனெனில் ஒலியை எடுத்துச் செல்ல வாயு மண்டலம் சந்திரனில் இல்லை.



∃4 + 4I = I

∃4 = 4I –

7. a. மகாராஷ்டிரம்
   b. கோண்ட்வானா (ம.பி.)
   c. குடகு (கர்நாடகம்)
   d. நாகலாந்து



# விரட்ட யோசனை

மணலூரிலுள்ள மாடசாமி தன் மகள் மல்லிகாவைக் கல்யாணம் செய்து கொடுப்பதற்காகத் தனது இரண்டு ஏக்கர் நிலத்தை ஐம்பதாயிரம் ரூபாய்க்கு விற்று விட்டான். அப்போது மல்லிகா ''அப்பா! இந்தப் பணத்தில் பாதியைக் கொண்டு ஒரு வீட்டை விலைக்கு வாங்கி விடுங்கள். அதில் நாம் குடிபோவோம். அதனால் எனக்குக் கல்யாணம் ஆனாலும் நீங்கள் இருக்க ஒரு வீடு இருக்கும். வீட்டை வாடகைக்கு விட்டுப் பணமும் நீங்கள் பெற முடியும்'' என்றாள்.

மாடசாமியும் அவளைப் பார்த்து ''உனக்குக் கல்யாணம் செய்து வைத்து உன்னை உன் கணவனின் வீட்டிற்கு அனுப்பி விட்டால் என் கவலை எல்லாம் தீர்ந்து விடும். அதன்பிறகு எனக்கு வீடு வாசல் என்றெல்லாம் எதற்கு? ஒண்டிக்கட்டை நான் எங்கே யாவது இருந்து விட்டுப் போகிறேன்'' என்றான்.

மல்லிகாவோ ''இல்லை அப்பா! என் கல்யாணம் நாளைக்கேவா நடந்து விடும்? எப்போது நடக்குமோ யார் கண்டது? அதனால் நான் சொல்கிற படி செய்வதுதான் நல்லது'' என்றாள். மாடசாமியும் சற்று யோசித்து விட்டு! முடிவில் தன் மகள் கூறியபடியே செய்யத் தீர்மானித்துக் கொண்டான்.

மாடசாமியும் அவ்வூரின் சோமநாதன் என்பவனின் வீட்டை வாங்கினான். சிறு வயதில் தந்தையை இழந்த சோமநாதனை அவனது தாய் மீனாட்சி பல வீடுகளில் சமையல் வேலை செய்து சிரமப்பட்டு வளர்த்தாள். சோமநாதன் கவலை இல்லாமல் ஊர் சுற்றிக் கொண்டிருந்ததால் அவனது தாய் மனமுடைந்து இறக்கவே அவன் தன் வீட்டை விற்று விட்டு அப்பணத்தைக் கொண்டு பட்டணத்தில் வியாபாரம் செய்யப் போய்விட்டான்.

புதிய வீட்டில் மாடசாமி தன் மகளோடு குடிபுகுந்தான். மல்லிகா வீட்டைப் பெருக்கி சுத்தம் செய்தாள்.

—கி. சுதா—



பிறகு அவள் சமையல் செய்ய சமையலறைக்குப் போய் அடுப்பை மூட்டி ''யாராவது எனக்கு பதிலாக இன்று சமையல் செய்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்'' என்று எண்ணினாள்.

அடுத்த நிமிடமே ''இன்றென்ன! தினமும் காலையிலும், மாலையிலும் உனக்கு பதில் நான் சமையல் செய்கிறேன்'' என்று கூறிக் கொண்டே ஒரு பெண் பிசாசு அவள் முன் குதித்தது, மல்லகா அதைக் கண்டு பயப்படவில்லை. ஏனெனில் அவள் தன் தாயை இழந்தது முதல் எந்த நிலையிலும் தைரியத்தைக் கைவிடாமல் செயல்பட்டு வந்தாள்.

அதனால் அவள் அந்தப் பிசாசிடம் ''யார் நீ?'' என்று கேட்கவே அதுவும் ''நான் இந்த வீட்டை உன் தந்தைக்கு விற்ற சோமநாதனின் தாய். சோமநாதன் புத்திசாலி. பட்டணத்தில் வியாபாரம் செய்கிறான். நான் பல வீடுகளில் சமையல் வேலை செய்து பிழைத்தவள். ஆனால் தினமும் என் வீட்டில் சமையல் செய்யாமல் இருக்க என்னால் முடியாது. அதனால் நான் தினமும் இங்கே வரத்தான் செய்வேன். இரண்டு வேளைகளிலும் சமையல் செய்து விட்டுத்தான் போவேன்'' என்றது.

மல்லிகா அதைக் கேட்டு பேச்சு மூச்சற்று நின்றாள். ஆனால் அந்தப் பிசாசோ ''என்ன பதில் பேசாமல் இருக்கிறாய்? உன் பதிலைப் பற்றி நான் கவலைப்படவில்லை. இதோ இப்போதே நான் சமையலறைக்குப் போய்ச் சமையலை ஆரம்பிக்கப் போகிறேன்'' என்று கூறிவிட்டுச் சமைலறைக்குள் சென்று விட்டது.

அது கேட்டு திடுக்கிட்டு மல்லிகா தன் தந்தையிடம் போய் பிசாசு சொன்னதைக் கூறினாள். அது கேட்டு மாடசாமி ''ஐயோ! இது பிசாசு நடமாடும் வீடா?'' என்று அலறவே மல்லிகாவும் ''பயப்பட வேண்டாம். அது தினமும் சமையல் செய்வதாகத் தானே கூறுகிறது. செய்து விட்டுப் போகட்டுமே'' என்றாள். மாடசாமியும் ''சரி. உன் இஷ்டம்'' என்றான்.

அப்போது சமைலறையிலிருந்து ''சாப்பாடு தயார். இரண்டு பேரும் சாப்பிட வாருங்கள்'' என்ற குரல் வந்தது, தந்தையும் மகளும் தயங்கியவாறே சமையலறைக்குள் சென்றனர். சாப்பாடும் அவர்களுக்கு ருசியாகவே இருந்தது. அதைச் சொல்வதற்குள் பிசாசு ''தினமும் நான் அதிகாலை சூரியோதயத்திற்கு முன் வந்து சமையலைச் செய்து வைத்துவிட்டுப் போய் விடுவேன். மாலையிலும்

இருட்டிய பிறகே வந்து சமைப்பேன்'' என்று சொல்லிவிட்டு மறைந்தது.

முதல் இரண்டு நாட்களுக்கு இது சரியாகவே இருந்தது. ஆனால் மூன்றாவது நாளிலிருந்து பிசாசின் ஒரே மாதிரியான சமையல் அவர்களுக்கு அலுத்துப் போயிற்று. அதிகாலையில் செய்து வைத்த உணவு மத்தியானம் சாப்பிடும் போது ஆறிக் கிடந்தது. இரவில் பிசாசு வந்து சமைத்து வைத்ததைச் சாப்பிடும் போது கூட பதினோறு மணியாகலாயிற்று. இது அவர்களுக்குக் கஷ்டமாக இருந்தது.

ஒருநாள் காலையில் மல்லிகா அந்தப் பிசாசிடம் ''எங்களுக்கு வேண்டியதை நானே சமைத்துக் கொள்கிறேன். நீ பட்டணத்திலுள்ள உன் மகனின் வீட்டிற்குப் போய் தினமும் இரண்டு வேளையும் அவனுக்குச் சமைத்துப்போடு'' என்றாள். பிசாசோ ''அப்படிச் செய்ய முடியாது, நான் பிசாசாகி விட்டேன் என்பதை அவன் அறிந்தால் அவன் மனம் வேதனைப் படும். அவன் நல்ல நிலையில் இருக்கிறான். நான் போக மாட்டேன்'' என்றது.

அப்போதும் மல்லிகா ''இதோ பார். உண்மையில் உன் சமையல் எங்களுக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை'' என்றாள். பிசாசோ ''ஓஹோ! என் சமையலிலா குறை சொல்கிறாய்? என்னைப் பற்றி ஏதாவது தவறாக பேசினால் நான் லேசில் விட மாட்டேன். நான் சமைத்து வைப்பதை நீங்கள் இருவரும் சாப்பிட்டுத் தான் ஆக வேண்டும் அதில் ஏதாவது குற்றம் குறை சொன்னால் உங்களை லேசில் விடமாட்டேன்'' என்று பயமுறுத்தியது.



அதைக் கேட்ட மல்லிகா ''இதென்ன ஒரு தலை வேதனை? எதுவும் செய்ய வேண்டாம் என்றாலும் இந்தப் பிசாசு பிடிவாதமாகச் சமையலைச் செய்து வைத்து விட்டுத் தான் போவதாகக் கூறுகிறதே. இதன் பிடியிலிருந்து எப்படித் தப்புவது?'' என்று எண்ணிக் கவலைப்பட்டாள்.

ஆத்திரம் கொண்ட பிசாசோ அன்று முதல் சமையலில் பண்டங்களை வேண்டுமென்றே வீணாக்கியது. மிளகாய், எண்ணெய், கடுகு போன்றவற்றை அளவுக்கு மேல் போட்டு வீணடித்தது. இதனால் வீட்டுக்கு சாமான்கள் மேலும் அதிகமாக வாங்க வேண்டி வந்தது.

ஒரு நாளிரவு மாடசாமியும் மல்லிகாவும் சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் மல்லிகாவின் இளம் பருவத் தோழி காந்தா அவளைக் காண வந்



தாள். அவள் பக்கத்து ஊரில் நடந்த ஒரு திருமணத்திற்கு வந்திருந்தாளாம். தந்தையும் மகளும் இரவில் பதினோரு மணிக்கு சாப்பிட்டுக் கொண்டிருப்பது கண்டு அவள் ''ஏன் இவ்வளவு நேரம் கழித்துச் சாப்பிடுகிறீர்கள்?'' என்று கேட்டாள். மல்லிகாவும் அப்போது அதற்கு ஏதோ ஒரு சாக்கைச் சொன்னாள். அது காந்தாவிற்குச் சரியான தாகப் படவில்லை. சாப்பாடு முடிந்ததும் இரு தோழிகளும் தம் விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது தன் வீட்டிற்கு வந்து சமையல் செய்து தொந்தரவு கொடுக்கும் பிசாசைப் பற்றி மல்லிகா தன் தோழியிடம் கூறி ''இது அவள் இருந்த வீடாம். அவள் மகன் சோமநாதன் இதை விற்றபோதிலும் இங்கு வந்து தான் தினமும் சமையல் செய்து விட்டுப் போவாளாம். இதை அவளது மகனின் வீட்டிற்குப் போய் செய்யச் சொன்னால், பட்டணத்தில் வியாபாரம் செய்யும் சோமநாதனுக்கு அவள் பிசாசாகித் திரிவது தெரியக் கூடாது என்று கூறுகிறது. அந்த விஷயம் வேதனைப்படுத்துமாம் அதை அப்பிசாசால் சகிக்க முடியதாம்'' என்றாள்.

அதுகேட்டு காந்தா ''இந்த வீட்டை விற்றவன் பட்டணத்து வியாபாரி சோமநாதனா? அவர் என் கணவரின் உயிருக்கு உயிரான நண்பர். இளைஞர். இன்னமும் அவருக்குத் திருமணம் ஆகவில்லை. எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நீ அதன்படி நடந்தால் இந்தப் பிசாசை இங்கிருந்து விரட்டி விடலாம். நீயும் சுகமாக இருக்கலாம்'' என்று கூறி இரகசியமாக ஒரு வழியை அவளுக்குச் சொன்னாள். அதைக் கேட்டு மல்லிகா ''இது நடக்குமா? எனக்கு என்னமோ சந்தேகமாக இருக்கிறது'' என்றாள். காந்தாவோ ''கவலைப்படாதே. நான் எல்லா ஏற்பாடுகளையும் செய்கிறேன்'' என்றாள். மல்லிகாவும் அது கேட்டுத் திருப்தி அடைந்தவளாய் புன்னகை புரிந்து ''சரி. நீ கூறியபடியே செய்கிறேன்'' என்றாள்.

மறுநாள் அதிகாலையில் பிசாசு சமையல் செய்ய மல்லிகாவின் வீட்டிற்கு வந்தபோது மல்லிகா ''இதோ பார். நானும் என் தந்தையும் ஒரு அவசர வேலையின் பொருட்டு இன்று காலை பத்து மணிக்குக் கிளம்பி வெளியூருக்குப் போகப் போகிறோம். திரும்பி வர இரண்டு வாரங்கள் ஆகும்'' என்றாள். பிசாசும் ''இரண்டு வாரங்களா! அவசர வேலையா? சரி, பதினான்கு நாட்கள் முடிந்ததும்

பதினைந்தாவது நாளன்று சரியாக இங்கு வந்து விட வேண்டும். தவறினால் இந்த வீட்டை நொறுக்கித் தூள் தூளாக்கி விடுவேன். தெரிந்ததா?'' என்று கடுமையாக எச்சரித்தது.

அன்று மல்லிகா தன் தந்தையுடன் காலை பத்து மணிக்குப் பட்டணத்திற்குப் புறப்பட்டுச் சென்றாள். காந்தாவின் முயற்சியால் அவளுக்கும் சோமநாதனுக்கும் ஒருவாரத்தில் கல்யாணம் நடந்து முடிந்தது. அதற்குப் பின் ஒரு வாரம் மல்லிகா தன் கணவனோடு பட்டணத்தில் இருந்து விட்டுப் பதினைந்தாவது நாளில் தன் கணவனுடனும் தன் தந்தையுடனும் தன் ஊருக்கு வந்தாள். அவள் வீட்டுக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்த சில நொடிகளில் பிசாசு சமையல் செய்ய சமையலறைக்குள் வந்தது.

அது சமையலை ஆரம்பிக்கும் போது மல்லிகா அதனிடம் ''அத்தை! உங்கள் மகனுக்கு இப்போதெல்லாம் வெறும் தயிர்ப் பச்சடி பிடிக்கிறதில்லை. அதில் வெங்காயத்தை நறுக்கி போட்டால்தான் பிடிக்கிறது. நான் அவரைக் கல்யாணம் செய்து கொண்டு கடந்த பத்து நாட்களாக வெங்காயத்தயிர்ப்பச்சடிதான் செய்து போட்டு வருகிறேன். நீங்களும் உங்கள் மகனுக்கு நான் செய்வது போல வெங்காயத் தயிர் பச்சடி தயார் செய்யுங்கள்'' என்றாள்.

அதைக் கேட்ட பிசாசு திடுக்கிட்டு ''ஓ! நீ போன அவசர வேலை இது தானா? என் மகனை மணந்து கொண்டதோடு அவனையும் இங்கே அழைத்துக் கொண்டு வந்து விட்டாயா? அவனுக்கு நான் பிசாசாகித் திரிவது தெரிந்தால் மிகவும் சங்கடப்படுவானே. இப்போதே இங்கிருந்து போய் விடுகிறேன். இனி மேல் நீயும் என் மகனும் இருக்கும் இந்த வீட்டிற்குள் அடி எடுத்துக்கூட வைக்க மாட்டேன்'' என்று கூறி அங்கிருந்து ஓடி விட்டது.

பிசாசின் தொல்லை ஒழிந்தது என்று அவள் மகிழ்ந்தாள். தனக்கு நல்ல கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்ததற்காக அவள் தன் சிநேகிதி காந்தாவிற்கு உளமாற நன்றி செலுத்தினாள். அன்று முதல் தன் வீட்டு சமையலை அவளே செய்ய, பிசாசு அதற்குப் பின் அந்த ஊர்ப் பக்கம் தலைகாட்டவே இல்லை.






# உதவிய குரங்கு

**கோ**பியின் தந்தை ஒரு செப்புக் காசு கூட வைக்காமல் தன் மகனையும் மனைவியையும் விட்டு விட்டு இறந்து போனான். கோபியை வளர்க்க அவனது தாய் பல வீடுகளில் வீட்டு வேலைகளைச் செய்ய வேண்டி வந்தது. கோபியோ தாயின் வளர்ப்பில் நன்றாகச் சாப்பிட்டுப் படுத்துத் தூங்கினான். அவன் ஒரு வேலையும் செய்யாமல் இருந்து வந்தான். அவனது தாயோ தன் ஒரே மகனான அவனைக் கண்டிக்க மனமில்லாமல் அவன் போக்கிலேயே போகவிட்டாள்.

கோபிக்கு இது மிகவும் நல்லதாகப் போயிற்று. தான் ஏதாவது வேலை செய்து தன் தாய்க்கு உதவ வேண்டும் என்று கூட அவன் நினைக்கவில்லை. வேளா வேளைக்குச் சாப்பிடக் கிடைத்து விடவே அவன் தன் போக்கிலேயே இருந்தான்.

இப்படிச் சோம்பேறியாக இருக்கும் கோபியை எப்படித் திருத்தி ஒரு வேலையைச்செய்ய வைப்பது என்று அவன் தாய் கவலைப் படலானாள். ஒருநாள் அவள் தன் மகனிடம் ''நீ இப்படி ஒருவேலையும் செய்யாமல் சோம்பேறியாகப் படுத்துக் கிடப்பது உனக்கே சரி என்று தோன்றுகிறதா?'' என்று கேட்டாள். அவனோ ஒரு பதிலும் கூறாமல் படுத்துக் கொண்டே இருந்தான், இதைக் கண்ட தாய் அவனது எதிர்காலம் எப்படி இருக்குமோ என்று கவலைப்படலானாள்.

கோபியின் அடுத்த வீட்டுக்காரன் அயல்நாட்டிற்குப் போய் வியாபாரம் செய்பவன். அவன் வியாபாரத்தின் பொருட்டு சீன நாட்டிற்குப் போகப் போகிறான் என்று கோபியின் தாய் கேள்விப்பட்டாள். அவளிடம் அப்போது ஐந்து வெள்ளிக் காசுகள் சேர்ந்திருந்தன. அவற்றை எடுத்து கோபியிடம் கொடுத்து ''மகனே. இவற்றைப் பக்கத்து வீட்டு வியாபாரியிடம் கொடுத்து அவர் சீனாவிலிருந்து திரும்பி வரும் போது நீ வியாபாரம்

—சங்கர சுவாமிநாதன்—

செய்வதற்கு ஏற்றதாக எதாவது ஒரு பொருளை வாங்கிக் கொண்டு வரும் படிச் சொல்'' என்றாள்.

கோபியும் தன் தாய் சொன்னதைக் கேட்டு முக்கி முனகிக் கொண்டே எழுந்து சென்று அந்த வியாபாரியைக் கண்டு ஐந்து வெள்ளிக் காசுகளைக் கொடுத்து சீனாவிலிருந்து அதற்கு ஒரு பொருளை வாங்கி வரும்படி வேண்டி னான். அதைக் கொண்டுதான் வியா பாரம் தொடங்க விரும்புவதாகவும் கூறினான். அதைக் கேட்டு அந்த வியா பாரி தனக்கு வந்த சிரிப்பை அடக் கிக் கொண்டான். அந்த ஐந்து வெள்ளிக் காசுகளுக்கு வியாபாரம் செய்வதற்கு ஏற்ற என்ன பொருள் கிடைத்து விடப் போகிறது என்பதே அதற்குக் காரணம்.

வியாபாரி அவன் கொடுத்த காசு களை வாங்கிக் கொண்டு ''ஏதாவது வாங்கி வருகிறேன்'' எனவே கோபி யும் திருப்தி அடைந்து தூங்கப் போய் விட்டான். அந்த வியாபாரியும் மற்ற வியாபாரிகளோடு சேர்ந்து வியா பாரம் செய்யக் கப்பலில் ஏறி அயல் நாடுகளுக்குக் கிளம்பி விட்டான். கப்பல் சீனாவுக்குப் போகும் வழியில் பல நாடுகளுக்குச் செல்லவே வியா பாரிகள் அங்கு தாம் கொண்டு போன சரக்குகளை நல்ல லாபத்திற்கு விற்றார்கள். சீனாவை அடைந்த அவர் கள் தம்மிடமிருந்த பணத்தைக் கொண்டு பலவிதப் பொருள்களை வாங்கிக் கப்பலுக்குக் கொண்டு போனார்கள். கப்பலும் அங்கிருந்து இந்தியா நோக்கி வரலாயிற்று.

சீனாவிலிருந்து சற்று தூரம் வந்த போதுதான் கோபியின் பக்கத்து வீட்டு




வியாபாரிக்கு கோபி கொடுத்த ஐந்து வெள்ளிக் காசுகளைப் பற்றிய நினைவு வந்தது. அவன் அடுத்து கப்பல் நிற்கும் நாட்டிலிருந்தாவது அந்த ஐந்து வெள்ளி காசுகளுக்குக் கிடைக்கும் ஏதாவது ஒரு பொருளை வாங்கி எடுத்துச் செல்லத் தீர்மானித் துக் கொண்டான்.

கப்பலும் ஒரு தீவை அடைந்தது. அப்போது பல பிச்சைக்காரர்கள் கப் பலை நோக்கி ஓடி வந்தார்கள். அவர் களில் ஒருவனிடம் மூன்று குரங்குகள் இருந்தன. அவற்றில் இரண்டு பலவித மான வித்தைகளை அதன் சொந்தக் காரன் சொன்னபடி செய்து காட்டின. ஒரு குரங்கு மட்டும் எதுவும் செய்யா மல் இருந்தது. அக்குரங்குகளைப் பார்த்த வியாபாரி அவற்றில் ஒன்றை வாங்கிக் கொண்டு போய் கோபிக்குக் கொடுத்து விடுவது என நின்னத்தான்.

அவன் அந்தக் குரங்காட்டியிடம்



ஒரு குரங்காட்டியாக இருந்து காசு சம்பாதி'' என்று சொல்வது என்று அந்த வியாபாரி நினைத்தான். கப்பல் அத்தீவிலிருந்து கிளம்பிய சில நாட்களுக்குப் பின் முத்துத் தீவை அடைந்தது. அத்தீவைச்சுற்றிக்கடலில் ஏராளமாக முத்துச்சிப்பிகள் இருந்தன. அதனால் எதாவது ஒரு கப்பல் அத்தீவிற்கு வந்தால் அத்தீவிலுள்ள மீனவர்கள் கடலில் குதித்து முத்துச் சிப்பிகளை எடுத்து வந்து வியாபாரிகளிடம் மிக மலிவான விலைக்கு விற்று வந்தார்கள். வியாபாரிகள் வாங்கும் சிப்பிகளில் அவரவரது அதிர்ஷ்டத்தைப் பொறுத்து நல்ல முத்துக்கள் இருக்கும்.

''நீ உன் குரங்குகளில் ஒன்றை விலைக்குக் கொடுக்கிறாயா? ஐந்து வெள்ளிக் காசுகள் கொடுக்கிறேன்'' என்றான். குரங்காட்டியும் ஒரு வித்தையும் செய்யாமலிருந்த கிழக் குரங்கைக் காட்டி ''இதை வேண்டுமானால் கொடுக்கிறேன். இதை இன்னொரு தீவிலிருந்து ஐந்து வெள்ளிக் காசுகள் கொடுத்து வாங்கி வந்தேன். ஆனால் இது நான் சொல்லிக் கொடுக்கும் வித்தைகளைச் செய்யாமல் இருக்கிறது'' என்றான். வியாபாரியும் ஐந்து வெள்ளிக் காசுகளுக்கு அதாவது கிடைத்ததே என எண்ணி அதை வாங்கிக் கப்பலில் வைத்துக் கொண்டான்.

குரங்கைக் கொண்டு போய் கோபியிடம் கொடுத்து ''கோபி! உன் ஐந்து வெள்ளிக் காசுகளுக்கு இந்தக் குரங்குதான் கிடைத்தது. இதற்கு வித்தைகளைப் பழக்கிக் கொடுத்து நீ

கப்பல் அந்தத் தீவிற்கு வந்து நின்றது முத்துக்களை வாங்கிக் கொள்வதற்குத்தான். அந்தக்கப்பலைக் கண்டதுமே மீனவச் சிறுவர்கள் ஓடி வந்து கடலில் குதித்து முத்துச் சிப்பிகளை எடுத்து வரலானார்கள். அதுவரை கப்பலில் எதுவும் செய்யாமல் படுத்துக் கிடந்த வியாபாரியின் கிழக் குரங்கு பல சிறுவர்கள் ஓடும் சத்தம் கேட்டு எழுந்து கடலை நோக்கி ஓடியது.

வியாபாரியோ குரங்கு தப்பி ஓடுகிறதே என்று எண்ணிக் கவலைப்படலானான். ஆனால் சற்று நேரத்தில் அவனது கவலை மறைந்து விட்டது. ஏனெனில் அந்தக் குரங்கு பல முத்துச் சிப்பிகளை எடுத்து வந்து வியாபாரியின் முன் போட்டது. இவ்வாறு அது பலதடவைகள் செய்து வியாபாரியின் முன் ஒரு பெரிய முத்துச்சிப்பிக் குவியலைச் செய்து விட்டது. அவை சுமார் ஆயிரம் முத்துச் சிப்பிகள்.

மற்ற வியாபாரிகள் மீனவச்சிறுவர்களிடமிருந்து முத்துச் சிப்பிகளை வாங்கி வைத்துக் கொண்டார்கள். அவர்களுக்கு ஒன்றோ அல்லது இரண்டோ நல் முத்துக்களே கிடைத்தன. ஒரு சிலருக்கு அது கூடக் கிடைக்கவில்லை. ஆனால் கிழக் குரங்கு கொண்டு வந்து போட்ட சிப்பிகளிலெல்லாம் மிகவும் விலை மதிப்புள்ள நல்முத்துக்கள் இருந்ததை அந்த வியாபாரி கண்டான்.

அதற்குக் காரணம் இதுவே அந்த வியாபாரி வாங்கிய கிழக் குரங்கு முத்துக் தீவில் பிறந்து வளர்ந்தது. அதன் சொந்தக்காரனான மீனவன் அதற்கு நல்ல முத்துக்கள் உள்ள சிப்பிக் களைப் பார்த்து கடலிலிருந்து எடுத்து வரப் பயிற்சி அளித்திருந்தான். அந்த மீனவன் இறந்து போகவே யாரோ ஒரு கப்பல் மாலுமி அதனைப் பிடித்துக் கொண்டு போய் வேறொரு தீவில் விற்று விட்டான். அதை ஐந்து வெள்ளிக் காசுகளுக்கு வாங்கிய குரங்காட்டி அதற்கு வித்தைகள் செய்யக் கற்பிக்க முயன்றான். ஆனால் அது எதுவுமே செய்யாமல் எப்போதும் படுத்துக் கிடந்தது. அதனால் அவன் அக் குரங்கை வியாபரிக்குத் தான் வாங்கின விலைக்கே விற்று விட்டான்.

இப்போது அது கோபியின் குரங்காகி விட்டது. அது கொண்டு வந்து கொடுத்த நல் முத்துக்களை வியாபாரி தனியாக ஒரு மூட்டையாகக் கட்டி வைத்தான்.

அந்த வியாபாரி நாணயமானவன். அதனால் கோபியின் பணத்தில் கோபிக்காக வாங்கிய குரங்கு கொண்டு வந்து கொடுத்த முத்துக் களை கோபியிடமே கொடுத்து அக் குரங்கின் சிறப்பை அவனிடம் கூறி விடத் தீர்மானித்துக் கொண்டான். அவன் தன் ஊரை அடைந்ததும் அந்த முத்துக்களையும் குரங்கையும் கோபியிடம் கொடுத்து விவரங்களைக் கூறினான். கோபி அந்த முத்துக்களை விற்றுத் தனக்கு நல்ல வீடாக வாங்கிக் கொண்டு முத்து வியாபாரம் செய்யலானான். அவன் அடிக்கடி தன் குரங்கோடு முத்துத் தீவிற்குப் போய் முத்துக்களை எடுத்து வரலானான். இப்படியாக குரங்கின் உதவியால் அவன் பெரிய முத்து வியாபாரி ஆனதோடு நல்ல பெண்ணை மணந்து கொண்டு சுகமாக வாழ்ந்து வரலானான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

*இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 செப்டம்பர் மாத இதழில் வெளியிடப்படும்.*



S.G. SESHAGIRI



S.G. SESHAGIRI

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜூலை 20–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

---

## மே மாதப் போட்டி முடிவு

*முதலாவது போட்டோ* : **தண்ணீரில் எடுத்த முத்து.**

*இரண்டாவது போட்டோ* : **வியர்வையில் கிடைத்த வித்து.**

*பரிசு பெற்றவர்* : **பி. ஆனந்த சுதா, குட்டம்.**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

# Let's make the world a sweeter place to live in.



I'm planting a Tulsi tree. Hope it grows into a B-I-I-G one.



Lovable, blind Chacha Kunwar. He's been my parents' guide. The least I can do is help him cross safely.



Aha! This time Dad's got the flu and Mum's told me to give him a dose of medicine.



Gangu Bai has coolly taken the day off. Leaving Radha Mausi and me in a soapy mess.



Before that rich glutton of a Raju snatches my Kaju Barfi, let me give it to poor Smita.



Naughty Timmy has got himself hurt. Now this lil' Doc will set him right.



I'm helping Uncle Rajeev with the car repairs. Though Mum said "I'll be a spanner in the works".



With Chandra, my maths teacher, numbers are fun. Time I gave her a dozen smiling roses.




Ravalgaon™

Years and years of sweet success